

ஸ்ரீ இளையாற்றகுடி பெரியவர்கள் :
**ஸ்ரீ காமகோடி பீடத்து 65-வது ஆசார்ய ஸ்வாமிகள்**
**ஸ்ரீ மகாதேவேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள்.**

சிவமயம்

இளையாற்றகுடி க்ஷேத்திரத்தில்
அதிஷ்டானம் கொண்டு

விளங்கும்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்
65-ஆவது பரமாசார்யார் அவர்களான

ஸ்ரீமத் ஜகத்குரு
மஹாதேவேந்திர ஸரஸ்வதி பாதாள்

அவர்களின்

திவ்ய சரணங்களில்

இச்சிறு நூல்

ஸமர்ப்பணம் செய்யப்பெறுகிறது

முத்திரை

இளையாற்றகுடி என்னும் இளைசைப் புராண வசனச் சுருக்கம் ஸ்ரீ மஹாஸன்னிதானத்தில் பார்வைக்கு வைக்கப்பட்டது.

கண்வமுனிவரின் மனக் கவலையான பாரம் நீங்கி விச்ராந்தியடையக் காரணமானதும், சுபத்திரர் என்ற அந்தணர் முதலியவர்களுக்குச் சித்தியைக் கொடுத்ததுமான இளையாற்றகுடி க்ஷேத்திரம் எல்லாவிதமான இளைப்பையும் போக்கவல்லது. இந்த க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் ஸமஸ்த கல்யாணங்களையும் நித்யமாய்க் கொடுத்தருளும் ஸ்ரீ நித்ய கல்யாணி ஸமேத ஸ்ரீ கைலாசநாதர் மனிதர்களின் இன்னலைத் தீர்த்துப் பரம மங்களத்தைக் கொடுக்கக் கூடியவர்.

இந்தப் பீடத்திலிருந்த பரமேஷ்டி குருநாதர்களுக்கும் இதுவே விச்ராந்தி ஸ்தானமான ஸித்தி ஸ்தானமாக உள்ளது.

இந்த க்ஷேத்திரத்துக்கு வருபவர்கள் இப்புத்தகத்தைப் பார்த்து இங்குள்ள விசேஷங்களைத் தெரிந்து கொண்டு எல்லா மூர்த்திகளையும் தரிசித்து, எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நாநம் முதலியன செய்து—பூர்ணமாக இம்மை மறுமைப் பயன்களை அடைவதற்கு இப் புத்தகம் மிகவும் உபயோகமாக இருக்கும்.

இத்தல விசேஷத்தை யாவரும் அறியும்படி இப் புத்தக கைங்கர்யத்தில் ஈடுபட்டவர்களுக்கு ஸ்ரீ நித்ய கல்யாணி ஸமேத ஸ்ரீ கைலாசநாதருடைய கிருபையினால் ஸகல மங்களங்களும் சித்திக்கும்படியாய் ஸ்ரீமஹா ஸன்னிதானத்தில் அனுக்ரஹித்த விவரம் தெரிவிக்கலான காரியம்.

**எஸ். ஸாம்பமூர்த்தி சாஸ்திரி,**
**மானேஜர்.**



காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள்.

# முகவுரை

இந்த இளையாற்றகுடி ஸ்ரீ கைலாசநாதஸ்வாமி ஸ்ரீ நித்யகல்யாணி அம்மன் ஆலயங்கள் சுமார் 800 ஆண்டுகளுக்குமுன் கட்டப்பெற்று, மதுரையில் சிறப்புடன் ஆண்டுவந்த பாண்டிய மன்னர்களால் சுமார் 400 ஆண்டு களுக்குமுன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து வந்து இப்பகுதி யில் குடியேறிய நாட்டுக்கோட்டை நகரத்தார்களிடம் அவர் களின் குலதெய்வமாக வழிபடுவதற்காக வழங்கப்பெற்ற தாகப் பெரியோர்கள் கூறுகிறார்கள். நாட்டுக்கோட்டை நகரத்தார்களிடம் ஒன்பது கோவில்கள் உண்டு. அவை இளையாற்றகுடி, இரணியூர், பிள்ளையார்பட்டி, மாத்தூர், வைரவம்பட்டி, நேமம், சூரக்குடி, இலுப்பக்குடி, வேலங்குடி என்பன ஆகும். இந்த ஒன்பது ஊர்களிலும் இருந்த சிவாலயங்களை நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் சிறப்பாகப் புதுப்பித்து அவற்றை நல்ல முறையில் பரிபாலித்து வரு கிறார்கள். இவற்றுள் முதன்மையான இளையாற்றகுடி நகரத் தார்கள் இங்கே உள்ள ஆலயத்தைச் சிறந்த முறையில் பரிபாலித்து வருவது எல்லோரும் அறிந்ததே. இவர்களில் ஏழு பிரிவினர் உள்ளனர். அவர்கள் ஒக்கூரார், கழனிவாசல் குடியார், பட்டினச்சாமியார், பெருமருதூரார், கிங்கிணிக் கூரார், பேரசெந்தூரார், சிறுசேத்துடையார் என்பவர்கள். எல்லாப் பிரிவுகளிலும் சேர்ந்து சுமார் 3200 புள்ளிகள் இப்போது உள்ளார்கள். இவர்களின் குடும்பத் தெய்வ மாகிய ஸ்ரீ நித்யகல்யாணி சமேத ஸ்ரீ கைலாசநாதஸ்வாமி யின் திருவருளாலே இவர்களின் வீடுகளில் நடக்கும் ஒவ் வொரு திருமணத்திற்கும் இந்தக் கோவிலிலிருந்து முந்திய இரவு அர்த்தசாமத்தில் சாத்தப்பெற்ற (மறுதினம் நிர்

மால்யமான) புஷ்பமாலையை அணிந்தே திருமங்கல்ய தாரணம் அதாவது திருப்பூட்டுவது இன்றும் நடந்துவருவது இவர்களுக்கு இந்தக் கோவிலிலிருக்கும் பக்திக்குச் சிறந்த சான்றாகும். மேலும், கோவிலுக்கு ஒவ்வொரு புள்ளியும் ஒவ்வொரு வருஷமும் சொற்பத் தொகை காணிக்கையாகக் கொடுத்து வருவது மேலும் இந்த நகரத்தார்களுக்குத் தொன்றுதொட்டுவரும் சிவபக்தியைக் குறிப்பதாகும். இவர்கள் ஒரே பிரிவில் விவாக சம்பந்தம் செய்து கொள்வதில்லை.

ஏதோ சில காரணங்களினால் இவர்களில் சிலர் கோர்ட்டுக்குப்போய், இந்தக் கோவிலுக்கு ஒரு ஸ்கீம் சென்னை ஹைகோர்ட்டாரால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. 1923-ம் வருஷத்து அப்பீல் சூட் 72-ல் 1-12-1926வயாக ஏற்பட்ட ஆர்டர் ஸ்கீம்படி இந்தக் கோவில் நிர்வாகம் செவ்வனே நடைபெற்றுவருகிறது. அதில் பரம்பரை தர்மகர்த்தாக்கள் நான்கு பேர்களில் 2 பேர் ஒரு தமிழ் வருஷத்திற்கும் மற்றைய 2 பேர் அடுத்த தமிழ் வருஷத்திற்கும் மாறி மாறி, தர்மகர்த்தாவாக இருந்தும், 5 வருஷத்திற்கு ஒரு முறை நியமனம் செய்யப்பெற்ற 3 பேரும் சேர்ந்து ஆக 5 பேர்கள் இந்தத் தேவஸ்தானத்தின் காரியங்களைப் பார்த்து வருகிறார்கள். எல்லாத் தர்மகர்த்தாக்களும் இந்த இளையாற்றங்குடி நகரக் கோவிலைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டுமென்பது அந்தக் கோர்ட் உத்தரவு. அதாவது கோர்ட் உத்திரவுக்கு முன்னிருந்த இந்த நகரத்தார்களின் பாத்தியதையைக் கோர்ட்டார் ஒப்புக்கொண்டு இவ்வாறு செய்திருக்கிறார்கள். இன்றும் இவ்வாறே நடந்து வருகிறது.

இக்கோவிலுக்கு உள்ளிட்ட சில கோவில்கள் உள்ளன. அவை வடக்கே சுமார் 3 மைலிலுள்ள கிரணிப்பட்டி

ஸ்ரீ முத்துமாரியம்மன் கோவில் ; அதற்குத் தெற்கே சுமார் ஒரு மைலில் உள்ள ஆவினிப்பட்டி ஸ்ரீ காட்டுச்சுப்பையா கோவில்; இன்னும் இளையாற்றகுடியிலேயே உள்ள ஸ்ரீ காமகோடி ஆச்சார்யாளின் 65-வது பீடத்தை அலங்கரித்த ஸ்வாமிகளின் அதிஷ்டானம் முதலியன. இவை எல்லாம் இந்த நகரத்தார்களின் பார்வையிலேயே உள்ளவை.

மேலே கண்ட ஏழு பிரிவு நகரத்தார்களுக்கும் தனித் தனியே ஒவ்வொரு விநாயகர் ஆலயமும் குளமும் இருப்ப தோடு, பட்டினச்சாமியார் பிரிவு நகரத்தார்களுக்குத் தனியே ஒரு சிவாலயமும், கழனிவாசல்குடியார் பிரிவு நகரத்தார்களுக்கு ஒரு விஷ்ணு ஆலயமும் நல்ல முறையில் பரிபாலிக்கப்பட்டுவருகின்றன.

இந்த ஸ்தலபுராணம் தற்போதுள்ள போர்ட் ஆப் ட்ரஸ்டிகளின் 8—11—62உ கூட்டத்தில் 9-வது விஷயமாக அச்சுப்போட்டு வெளியிட அனுமதிக்கப் பெற்றது.

இந்த ஸ்தலபுராணத்தை தமிழில் எழுதி அச்சிட்டுக் கொடுத்த சென்னை, அடையாறு, மகாமகோபாத்தியாய, டாக்டர், உ. வே. சாமிநாத ஐயர் நூல் நிலையம் கௌரவ அமைச்சர், ஸ்ரீ விசுவநாத ஐயர், எம்.ஏ.பி.ஓ.எல் அவர்களுக்கும் இதில் உதவிய பிற நண்பர்களுக்கும் எங்கள் நன்றி.

இளையாற்றகுடி,
29—1—1963.

தர்மகர்த்தர்களும் மேலாளரும்,
ஸ்ரீ கைலாஸநாதஸ்வாமி
ஸ்ரீ நித்யகல்யாணி அம்மன்
தேவஸ்தானம், இளையாற்றகுடி.

சிவமயம்

# முன்னுரை

## திருச்சிற்றம்பலம்

முத்த னைமுதற் சோதியை முக்கண்
அப்ப னைமுதல் வித்தினைச்
சித்த னைச்சிவ லோக னைத்திரு
நாமம் பாடித் திரிதரும்
பத்தர் காள்இங்கே வம்மின் நீர்உங்கள்
பாசம் தீரப் பணிமினோ
சித்த மார்தரும் சேவ டிக்கணம்
சென்னி மன்னித் திகழுமே

—திருவாசகம்

'அரிது அரிது மானிடர் ஆதல் அரிது' என்றனர் ஆன்றோர். அவ்வாறு கூற அமைந்த காரணங்களுள், தாவரம் முதலான பல்வகைப் பிறப்புக்களுள், தம்மை அறிதலான ஆற்றல் மானிடரே பெற்றுள்ளமை சிறந்ததாகும். இவ்வாற்றலறிவே மெய்ஞ்ஞானம் எனப்படும். இவ்வறிவு பெற்றவர் தமக்கும் தம் தலைவனுக்கும் உள்ள சம்பந்தத்தை அறிந்து, அதன் வழியிலே நின்று, பிறப்பென்னும் தம் பெரும் பிணியை அறுத்து, என்றும் நிலைத்ததான பேரின்பநிலையை அடைவர். இவ்வழியை அறிவதற்கும் அதனிலே நிற்பதற்கும் வேதாகமங்களும், புராண இதிகாசங்களும், பெரியோர் வரலாறுகளும், அவர்கள் நின்ற நெறிகளும், அவர்கள் இயற்றிய நூல்களும் நமக்குப் பெருந்துணையாயிருக்கின்றன. அவ்வாறு நூல்களும் பெரியோர்களும் வகுத்த வழிகளுள், யாவரும் பின்பற்றக் கூடியதும், மிகச் சிறந்த பலனை அளிப்பதுமாயிருப்பது ஆலயவழிபாடாகும். இந்த உண்மையை உறுதிப்

படுத்துவதுபோல் நம் பாரத நாட்டில், 'ஊரானோர் தேவ குலம்' என்றபடி, கிராமந்தோறும் ஒன்றோ பலவோ தேவாலயங்கள் விளங்குகின்றன. அவற்றின் ஒளியே நாட்டின் ஒளியாக இன்றுவரையில் விளங்கி வருவதும் கண்கூடு. இவ்வாலயங்களையும் இவற்றை ஒட்டிய தீர்த்தங்களையும் பற்றி இறைவர் செய்தருளிய திருவிளையாடல்களுக்குக் கணக்கேயில்லை; அவற்றை விளக்க எழுந்தருளிய இலக்கியங்களுக்கும் எல்லை இல்லை.

இவ்வாறு எழுந்த ஆலயங்களுள் பல சிவாலயங்களாகும். சிவாலயங்களுள் முக்கியமான மூர்த்தம் சிவலிங்கம். அந்த லிங்கங்களுள் சில ஸ்வயம்புவானவை; பிறர் ஒருவரால் பிரதிஷ்டிக்கப்பெறாது தானே தோன்றிய லிங்கம் ஸ்வயம்பு லிங்கமாகும். சில இடங்களில் முனிவர்களும், வேறு சில இடங்களில் மானிடர்களும் தேவர்களும் பிரதிஷ்டித்து வழிபட்ட லிங்கங்களும் வேறு மூர்த்தங்களுமுண்டு. இவையெல்லாம் மிக ஸான்னித்யமுடையவை. சில தலங்களில் ஈசுவரன் தம்மைப் பூசித்தவர்களிடம் மிகக் கருணைகொண்டு அவர்களுக்கு உதவி செய்ய ஏற்ற திருவிளையாடல்களைப் புரிந்திருக்கிறார். பரதகண்டமே கருமபூமியாதலாலும், அதிலும் சில புண்ய க்ஷேத்திரங்களில் செய்யப்படும் கருமங்கள் சிறந்த பலன்களை அளிப்பதாலும், பல தேவர்கள் தம் சாபம் நீங்கவும், பல முனிவர்களும் பிறரும் உயர்ந்த சித்திகள் பெறவும் ஏற்ற க்ஷேத்திரங்களை நாடி அங்கு வந்து தவம், வேள்வி, தானம் முதலியவற்றைச் செய்து நற்பேறு பெற்றிருக்கிறார்கள். சில க்ஷேத்திரங்களிலுள்ள தீர்த்தங்கள் மகாபுண்ணியங்களைத் தருவனவாக அமைந்துள்ளன. இவ்வாறு தலம், மூர்த்தி, தீர்த்தம் என்ற மூன்றனுள் ஒன்றாலும் பலவாலும் புகழ்பெற்ற புண்ணிய ஸ்தலங்கள்

களுக்கு ஈசுவர பக்தியை ஊட்டி அவர்களை நன்னிலைக்குக் கொண்டு வருவதில் நெடுங்காலமாகப் பெருந்தொண்டு புரிந்து வருவதை யாவரும் அறிவர். இப் புராணங்களெல்லாம் ரிஷிவாக்குக்களானதால் இவை மிகத் தூய்மையானவை. இவற்றை நழுவவிடாமல் போற்றிவருவது எல்லாப் பக்தி மான்களுக்கும் உரிய கடமையாகும்.

இந் நூலைப் படித்தால் இளைசைப்பதிக்கு இயற்கை யாக அமைந்த பெருமைகள் நன்கு புலப்படும். இஃது மனிதருடைய உடலுக்கு மட்டுமேயன்றி, உள்ளத்துக்கும் உண்டாகும் இளைப்பை ஆற்றி, சுகத்தையும் ஆனந்தத்தை யும் அளிப்பதில் மிகச் சிறந்த இடம் என்பது இச் சிறு நூலால் வெளியாகும். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் 65 ஆவது அதிபதியாய் விளங்கிய ஜகத்குரு **ஸ்ரீ மஹாதேவேந்திர ஸரஸ்வதி சங்கராசாரியார் அவர் கள் (1814—1851)** இந்நகரிலேயே தமக்கு அதிஷ்டானம் கொண்டருளியுள்ளமையும், இப்பொழுது ஆதி சங்கரரின் திருவவதாரமே என்று உலகமெல்லாம் போற்றும் 68 வது பீடாதிபதிகளாக விளங்கும் ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகள் (தம்பிரதம சீடர் அவர்களுடன்) அவர்களால் பெரிதும் விரும்பப்பெற்று விளங்குவதும் இளைசைப் பதியின் புண்ணியச் சிறப்பை எடுத்துக்காட்டும் நிதர்சன உதாரணங்களாகும். அப் பெரியார் இளைசையில் எழுந்தருளி அங்கிருந்து உலகுக்கு உதவிய அருளுப தேசங்களுள்ளும் அருட்செயல்களுள்ளும் (1) அஷ்டகிரகச் சேர்க்கையால் உலகம் நலியாமல் காக்க ஸ்ரீ ஞான சம்பந்த சுவாமிகள் அருளிய கோளறுபதிகத்தை நாடெங்கும் பாடி வர ஆஞ்ஞையிட்டு அதனுல் உலகத்தை ரக்ஷித்ததும், (2) நம் மதத்தின் பொக்கிஷ சாலைகளாக விளங்கும் நம்



ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள்

வற்றை ஒட்டிய ஆலயங்கள், சிற்பம், கலைகள் முதலிய லவும், இப்பொழுது பெரும்பாலனவும் மறைந்து பானவை திரும்பவும் உய்யும் பொருட்டுச் சர்வதேசங் ளிலிருந்தும் நிபுணர்களை வரவழைத்து ஆராய்ச்சிகளை டத்திவைத்துப் பல தீர்மானங்களை நிறைவேற்றி மகத்தான வெற்றி கண்டருளியதும், (3) இன்று அந்நியர்களால் பாரத ாட்டுக்கு உண்டான நலிவை நீக்கி வெற்றித்திருவான ஸ்ரீ விஜயலக்ஷ்மியின் வரவேற்பை நாம் பெற வழிகளை வரையறுத்து உபதேசித்தருளியதும் குறிப்பிடத்தக்கதாம். இளையாற்றகுடியின் தலப் பெருமையும் ஸ்ரீ ஜகத்குரு ரமாசார்யார் அவர்களின் தவப்பெருமையும் ஒன்று சேர்ந்துள்ளமைக்கு அறிகுறியாக அப்பெருமானின் அருளாசியான ஸ்ரீமுகத்துடன் இந்நூல் வெளிவருகின்றது. அம் மகானின் திருவடிகளைப் போற்றுவதே நம் சிறந்த டமையாகும்.

ஸ்ரீ நித்யகல்யாணி ஸமேத ஸ்ரீ கைலாஸநாத ஸ்வாமியின் திருவருள் என்றும் எங்கும் நிலவ வேண்டுகிறோம்.

ரா. விசுவநாத ஐயர்
மகாமகோபாத்யாய, டாக்டர்,
உ. வே. சாமிநாத ஐயர் நூல் நிலையம்,
அடையாறு, சென்னை-20

நாட்டுக்கோயில்கள் முன்போல நல்ல ஸ்திதியில் அமைய, அவற்றை ஒட்டிய ஆகமங்கள், சிற்பம், கலைகள் முதலிய பலவும், இப்பொழுது பெரும்பாலனவும் மறைந்து போனவை திரும்பவும் உய்யும் பொருட்டுச் சர்வதேசங் களிலிருந்தும் நிபுணர்களை வரவழைத்து ஆராய்ச்சிகளை நடத்திவைத்துப் பல தீர்மானங்களை நிறைவேற்றி மகத்தான வெற்றி கண்டருளியதும், (3) இன்று அந்நியர்களால் பாரத நாட்டுக்கு உண்டான நலிவை நீக்கி வெற்றித்திருவான ஸ்ரீ விஜயலக்ஷ்மியின் வரவேற்பை நாம் பெற வழிகளை வரையறுத்து உபதேசித்தருளியதும் குறிப்பிடத்தக்கதாம். இளையாற்றகுடியின் தலப் பெருமையும் ஸ்ரீ ஜகத்குரு பரமாசார்யார் அவர்களின் தவப்பெருமையும் ஒன்று சேர்ந்துள்ளமைக்கு அறிகுறியாக அப்பெருமானின் அருளாசியான ஸ்ரீமுகத்துடன் இந்நூல் வெளிவருகின்றது. அம் மகானின் திருவடிகளைப் போற்றுவதே நம் சிறந்த கடமையாகும்.

ஸ்ரீ நித்யகல்யாணி ஸமேத ஸ்ரீ கைலாஸநாத ஸ்வாமியின் திருவருள் என்றும் எங்கும் நிலவ வேண்டுகிறோம்.

ரா. விசுவநாத ஐயர்
மகாமகோபாத்யாய, டாக்டர்,
உ. வே. சாமிநாத ஐயர் நூல் நிலையம்,
அடையாறு, சென்னை-20

# பொருளடக்கம்

உ

ஸ்ரீ குருப்யோ நம:

திருச்சிற்றம்பலம்

# இளையாற்றகுடி மான்மியம்

கடவுள் வாழ்த்து

*சிவமெனும் பொருட்டாய் மூன்று*
*திகழெழுத் துடைத்தாய் நின்ற*
*உவமையில் பிரண வத்தை*
*உலகெலாம் தெளிய ஆங்கே*
*கவளமா பூதம் தேவு*
*கலந்ததோர் உருவம் கொண்டு*
*நவமுற உதித்த முன்னோன்*
*நற்பதம் போற்றி வாழ்வாம்.*

## 1. புராண வரலாறு

புண்ணிய பூமியாகிய நம் பரத கண்டத்தின் வடவெல்லையாய் விளங்கும் இமயமலைச் சாரலிலே, கங்கா நதியின் கரையிலே, முனிவர்கள் தவம் செய்வதற்கெனப் பிரம தேவனால் நியமிக்கப் பெற்றதும் 'நைமிசாரணியம்' என்ற பெயருடன் கூடியதும், எக்காலத்தும் முனிவர்கள் தங்கித் தவம் புரிந்துவருவதுமான வனம் ஒன்று உண்டு. ஒருசமயம் அங்கிருந்த முனிவர்கள் எல்லோரும் ஒருமித்து, **சத்திரயாகம்** என்ற நெடுங்காலம் செய்யத்தக்க ஒரு வேள்வியைச் செய்யத் தொடங்கினார்கள். அதன்பொருட்டு அங்கு

எழுந்தருளிய சூதமகா முனிவரை மற்ற முனிவர்கள் நோக்கி, "திருவருளே உருவமாயமர்ந்த முனிவர் பெரும! தாங்கள் எங்கட்கு எத்தனையோ சமயங் களில் கூறியருளிய சிவ கதைகளைக் கேட்டும் எங்கள் ஆவல் சிறிதும் தணிந்த பாடில்லை. அவற்றைக் கேட்கக் கேட்கச் சித்த வைராக்கியமும், திவ்ய ஞான மும், சிவபக்தியும் பெருகுமன்றோ? ஆகவே, அவற்றைத் தங்கள்பால் இன்னும் கேட்டறிய ஆவ லடைகின்றோம். அவ் வரலாறுகளுள்ளும், அப் பெருமானால் மிகவும் விரும்பப்பெறும் புண்ணியத் தலங்களுள் மிகச் சிறந்தது எது என்பதையும், அத் தலத்தின் பெருமைகளையும் தங்கள்பால் கேட்டறிய மிகவும் விரும்புகிறோம்" என்று விண்ணப்பிக்க, சூதர் சிவபெருமானின் திருவருளை வியந்து, தம் குரு வான வியாஸ பகவானைத் தம் இருதயத்திலே தியானம் செய்து, பேசத் தொடங்கினார்.

"முக்குற்றங்களையும் களைந்து விளங்கும் சான் றோர்களே! சிவபெருமானுடைய கதைகளைக் கேட்ப தில் விருப்பமுடைமையே மிகப் பெருஞ் செல்வமாகும். அதைவிட இப் பூவுலகில் கிடைக்கக் கூடிய மேலான செல்வம் வேறெதுவுமில்லை. இவ்வருட் செல்வம் உங்களிடம் நன்றாக அமைந்துள்ளது. ஆகவேதான் இன்னும் மேன்மேலும் சிவ கதைகளைக் கேட்க விரும்புகிறீர்கள். யாம் சொல்வதை அன்போடு கேளுங்கள்.

சிவபெருமானுக்கு உகந்த நகரங்களுள் மிகச் சிறப்புற்றது, '**இளைப்பினை ஆற்றும் நகரம்**' என்னும் அழகிய பெயரைக் கொண்ட **இளைசைப் பதியாகும்**;

அது பூமியிலுள்ள சிவ ஸ்தலங்களுக்குள் மிக மேன்மையுடன் விளங்குவதாகும். அதன் பெருமை பரம இரசியமானது; எவ்வகைப் பாவங்களையும் போக்கவல்லது; இதன் வரலாற்றைக் கேட்பவர்களுக்கு ஒப்பற்ற மங்கலங்கள் பெருகும்; எல்லா நலன்களும் கைகூடும்; இம்மை மறுமைப் பயன்கள் கிடைக்கும். இந்த மான்மியத்தை முன்னொரு காலத்தில், வஸிஷ்டர் முதலிய முனிவர்களுக்கு அகஸ்தியர், கூறினார்; இவ்வரலாறு பிரமாண்ட புராணத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அதனை நான் உங்கட்கு இப்பொழுது சொல்லுவேன்; கேட்பீர்களாக.

ஒரு காலத்தில் காசிமகா க்ஷேத்திரத்திலே வஸிஷ்டர் முதலான மகரிஷிகள் பலர் கூடி, சித்திகளைத் தரக்கூடிய கங்கைத் துறைகளிலும் ஞான வாவிகளிலும் ஸ்நாநம் பண்ணி, ஸ்ரீ விசுவநாதரை வணங்கி அவரை ஸ்தோத்திரம் பண்ணி, முக்தி மண்டபத்தில் எழுந்தருளியிருந்து, சிவபெருமானுடைய மகிமைகளையெல்லாம் புகழ்ந்து பாராட்டிக் கொண்டிருந்தனர். அச்சமயம் அவர்களுடன் வீற்றிருந்த அகஸ்திய முனிவரை அவர்கள் வணங்கி, அவரை நோக்கி, “பரமேசுவரருக்கு நிகராக விளங்கும் பெரியோய்! முருகக் கடவுளின் அடியார்களுள் முதன்மைத் தானம் தங்களுக்கே உரியதன்றோ? தங்களுடைய பெருமைகளை நாங்கள் கணித்துரைக்க வல்லோமோ? எங்கட்கு ஒரு குறை உளது; அதைத் தீர்க்க வல்லார் தாங்களே யாவீர்கள்; உலகில் ஸ்வயம்பு லிங்கங்கள் விளங்கும் இடங்கள் யாவற்றையும் தாங்கள் அறிவீர்களே! அந்த ஸ்வயம்பு லிங்கங்களுள்

உத்தமமானது எது? அதைப் பற்றியும் அஃது எழுந்தருளியுள்ள க்ஷேத்திரம், தீர்த்தம் இவற்றைப் பற்றியும் அறிய விரும்புகிறோம்; அருள்புரிக" என்று வேண்டிக்கொண்டனர்.

அதனைக் கேட்ட குடமுனிவர் மிகுந்த மகிழ்ச்சி கொண்டு, தம் உள்ளத்தை ஒரு நிலையில் நிறுத்தி, ஸ்ரீ விசுவேசுவரரையும் தம் குருவான ஆறுமுகக் கடவுளையும் தியானித்து, அவர்களின் திருவடிகளைப் போற்றி, பின்பு, **புராதன வனததில் இளசை** நகரில் ஸ்வயம்புவாய் எழுந்தருளியுள்ள **ஸ்ரீ கைலாசநாத ஸ்வாமியையும் நித்யகல்யாணி அம்மையையும்** அடியார்களின் ஆபத்துக்களைக் கெடுக்கவல்ல **வடுகநாதரையும்** வணங்கி, ஸ்ரீ பஞ்சாட்சரத்தை ஜபித்து, திருவருட் கடலிலே மூழ்கித் திளைத்தெழுந்து, வஸிஷ்டர் முதலான மகரிஷிகளின் திவ்ய முகங்களை நோக்கி, "முனிவர்களே! நீங்கள் கேட்க விரும்பும் இவ்வரலாறு பிரமதேவரால் நாரத முனிவருக்கு முன்னொரு காலத்தில் கூறப்பெற்றது. அதை இப்பொழுது உங்கட்கு யான் சொல்லுவேன்" என்று கூறியருளினார். அச்சொற்களைக் கேட்ட முனிவர் யாவரும் அகஸ்தியரை நோக்கி, "நான்முகன் நாரத பகவானுக்குக் கூறிய விதம் யாது?" என்று வினவ, அகஸ்தியர் கூறுவாராயினர்.

"உலகிலுள்ள புண்ணியங்கள் யாவும் ஓர் உருக்கொண்டாற் போன்றது கயிலாயம்; அது, ஞானமே வடிவானது; ஞானிகள் உள்ளத்தில் விளங்குவது; சகல புண்ணியங்களுக்கும் இருப்பிடமானது; எந்த நோயையும் நீக்க வல்லது; எதையும் தரவல்லது.

அங்கு எக்காலத்திலும் வேத ஓசையும், தேவ துந்துபி முழக்கமும், முனிவர்களின் தோத்திர ஒலியும், தேவர்களின் பிரார்த்தனை ஓசையும், பூதங்களின் ஓசையும் நிரம்பியிருக்கும். அதன் சிகர பந்திகளும், விமானங்களும், பிரமதகணங்களின் நிலைகளும் எப்பொழுதும் ஒளியுடன் விளங்கிக்கொண்டிருக்கும்.

அத்தகைய கயிலாய கிரியின் நடுவில், தாமரை மலரின் இடையிலுள்ள கொட்டை போலத் தங்கமயமான கோயில் ஒன்று உண்டு. அத் திருக்கோயிலின் இடையிலே பல்லாயிரம் கோடி சூரியர்கள் ஒருங்கு கூடிப் பிரகாசிப்பது போன்று ஒளி வீசும் திவ்விய சிங்காசனத்தின்மீது அகண்ட பரிபூரண சச்சிதானந்தப் பிழம்பான எம்பெருமான் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு,

**திங்கள் சூடிய சடிலமும் திகழொரு முகமும்**
**பொங்கு முக்கணு மான்முதற் பொலிந்திடு நான்காம்**
**அங்கை யுங்கறைக் கண்டமும் சேர்ந்தமெய் யழகும்**
**மங்கை பாகமு முடையதோர் சீகண்ட வடிவாய்**

என்றபடி, சந்திரனைச் சூடிய சடையும், ஒற்றைத் திருமுகமும், முக்கண்களும், மான், மழு, அபயம், வரதம் என்ற நான்கினைக் கொண்ட திருக்கைகளும், நீலகண்டமும், சிவந்த திருமேனியும், உமாதேவியார் மேவும் வாமபாகமுமுடைய ஸ்ரீகண்ட மூர்த்தியாய் விளங்குகின்றார். அங்குப் பூதர்கள் பலவித வாத்தியங்களை முழக்க, முனிவர்கள் வேத சிரமான உபநிஷத்து வாக்கியங்களினாலே ஸ்தோத்திரம் செய்ய, தும்புரு வாதியோர் யாழ் வாசிக்க, இவ்வாறு திருவோலக்கம் கொண்டு எம்பெருமான் உலகங்களெல்லாம் உய்யும்

பொருட்டு எக்காலமும் விளங்கிக்கொண்டிருப்பார்; இத்தகைய சமயங்களுள் ஒருநாள் திருவோலக்கத்தில் எழுந்தருளியிருக்கும் பரம்பொருளைத் தரிசனம் பண்ணவேண்டித் திருமால், பிரமன் இவர்களைத் தலைமையாகக் கொண்டு இந்திரன் முதலிய தேவர்கள் கைலாயத்திற்கு வந்தார்கள். அவ்வாறு வந்தவர்கள் திருக்கோயிலின் வாசலிலே காவல் பூண்டருளிநிற்கும் நந்தியம் பெருமானிடம் விடைபெற்று, கோயிலினுள் புகுந்து, தேவர்களுக்குத் தேவரும், உலகங்கள் யாவற்றிற்கும் நாயகருமான **ஸ்ரீகண்ட பரமசிவனை** அன்போடு வணங்கி, பஞ்சாக்ஷரத்தை ஜபித்து, கருணையங் கடலான எம்பெருமானின் திருவுளக் கருத்தை நோக்கிக்கொண்டு நின்றனர்.

அவ்வாறிருந்தபோது **நாரதமுனிவர்** (சிவபெருமானின் திருக்குறிப்பை உணர்ந்தவாராய்) திருமாலையும் நான்முகனையும் வணங்கி, **நான்முகனை** நோக்கி, "எம்பெருமானே! அடியேன் செய்யும் விண்ணப்பத்திற்குச் செவிசாய்த்தருள வேண்டும். பூலோகத்தி லுள்ள தலம், தீர்த்தம், லிங்கம் என்றவற்றுள் புண்ணியமளிப்பதில் மிகச் சிறந்தவை யாவை என அறிய நான் விரும்புகிறேன்; ஆன்மாக்கள் பிறவிக் கடலைக் கடப்பதற்கு மிகவும் ஏற்ற ஸ்தலம் யாது? தீர்த்தம் யாது? மூர்த்தம் யாது? மானசம், வாசிகம், காயிகம் என்னும் முக்கரணங்களால் செய்யப்பெறும் நற்கருமங்களின் பலனை முழுமையும் தரவல்லவை இவற்றுள் எவை? இவற்றைத் தெரிவித்தருள வேண்டுகிறேன்" என்றார்.

அவற்றைக் கேட்ட **பிரமதேவரும்** சிவபிரானின் திருவருட் குறிப்பை உணர்ந்து, **நாரதரை** நோக்கி, "அன்ப! நீ கேட்ட வினு உலகமெல்லாம் உய்தற் பொருட்டே ஆகும்; நான் கூறுவதைக் கவனமாய்க் கேள். மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றும் பூவுலகில் ஒருங்கே மிகச் சிறப்புடன் விளங்கும் இடம் **இளையாற்றகுடி** என்னும் **இளைசைப் பதியாகும்.** அங்கு எழுந்தருளியுள்ள **கைலாசநாதர்** என்ற திருப் பெயரமைந்த ஸ்வயம்பு லிங்கம் இங்குள்ள கைலாய பதியேயாவர்; இளைசைத் தலத்துக்கு ஈடான வேறொரு தலமோ, அங்குள்ள **சித்த தீர்த்தத்துக்கு** ஒப்பான புண்ணிய தீர்த்தமோ வேறெங்கும் கிடையாது" என்று கூறியருளினர்.

அச்சொற்களைக் கேட்ட நாரத முனிவர் விம்மிதமடைந்து, "உலகங்களுக்கெல்லாம் பிதாவாயிருக்கும் எம்பெருமானே! மிகவும் அரிய செய்தி தங்களால் கூறப்பெற்றது. **இளைசை** நகரின் மேன்மைகளை மிகவும் நன்குய்த் தொகுத்தருளினீர்கள்; அம் மேன்மைகளைச் சற்று விரிவாக அறிய விரும்புகிறேன்; திருவருள்புரிக" என்று பிரார்த்திக்க, நான்முகன் ஸ்ரீ பரமேசுவரன் சந்நிதியில் அன்று கூடியிருந்த யாவரும் கேட்குமாறு அப்புண்ணிய ஸ்தலத்தின் பெருமைகளை விரித்துரைக்கலாயினர்" என்று அகஸ்திய பகவான் காசிவாச முனிவர்களுக்குக் கூறினர்.

---

# 2. ஸ்தல விசேஷம் : தீர்த்த விசேஷம்

## சுபத்திரர் வரலாறு

அகஸ்தியர் காசியம்பதியில் வஸிஷ்டர் முதலான முனிபுங்கவர்களை நோக்கி, 'ஒருமையுள்ளம் திகழும் பெரியோர்களே! பூலோக கைலாசமென்று விளங்கும் இளையாற்றகுடியின் பெருமைகளை ஒருவாறு சொல்ல முயல்கிறேன்.

உலகத்திலுள்ள புண்ணிய ஸ்தலங்கள் தோன்றி யதற்கு முந்தியே **இளையாற்றகுடி** இறைவரால் ஏற்படுத்தப் பெற்றது. அந்நகரம் அமைந்த இடம் **புராதன வனம்** என்ற பெயருடையதாகும். கிருத யுகத்தில் ஞானமும், திரேதா யுகத்தில் யாகமும், துவாபரயுகத்திலும் கலியுகத்திலும் தானமும் மோக்ஷ சாதனம் என்று நூல்கள் கூறும்; ஆனால், எல்லா யுகங்களிலும் சிவபூஜை மிகச் சிறந்த பயனை அளிக்குமென்றும், அதைவிடச் சிறந்த முத்திசாதனம் இல்லை என்றும் பெரியோர் கூறுவர். அத்தகைய சிவபூஜையை இளையாற்றகுடித் தலத்தில் புரிபவர்கள் அதன் அரும் பயன்களையெல்லாம் மிக விரைவில் அடைவார்கள். இந்த ஸ்தலத்தின் பெயரைக் கேட்ப தாலே மக்கள் அறத்தையும், இதனை நினைப்பதால் பொருளையும், தரிசிப்பதால் இன்பத்தையும், இங்கு மூன்று நாட்கள் வசிப்பதால் வீட்டையும் அடைவார்கள் என்பது திண்ணம். இது மகாபாதகங்கள் என்ற பஞ்சுக்குத் தீயாகும்; முன்னை வினைகளைத் தீர்த்துக் கொள்ள விரும்புபவர் இந்த ஸ்தலத்தை விரும்பி அடைவார்கள். இங்கு வசித்த ஒரு காரணத்தா

லேயே எறும்பு முதல் எல்லாப் பிராணிகளும் பிறவிக் கடலைக் கடந்துவிடுகின்றன என்றால் இதன் பெருமையை இன்னும் விளக்கவேண்டுமோ? இங்குச் செய்யப்படும் தானங்கள் யாவும் ஒன்று கோடியாகப் பயனைத் தரும். இதற்குச் **சிவபுரம், பூகைலாயம், காமப் பிரபூரணபுரம், சித்தபுரம், புராதனவனம், நித்தியகல்யாணிபுரம், சிரமாபநோதனபுரம்** (இளையாற்றகுடி) என்று பல பெயர்கள் உண்டு.

இனி, அங்குள்ள **சித்த தீர்த்தம்** என்னும் புண்ணிய தீர்த்தத்தின் பெருமைகளையும் கேளுங்கள். அதற்குச் **சிவதீர்த்தம்** என்ற வேறொரு பெயருமுண்டு. அதன் பெருமையைத் தெரிவிக்கப் பழமையான கதையொன்றுண்டு. முனிபுங்கவர்களே! அதனை நான் ஒருவாறு கூறக் கேளுங்கள்.

முன்னொரு காலத்திலே கோதாவரி தீரத்தில் **சுபத்திரகம்** என்ற கிராமத்தில், **சுபத்திரர்** என்ற ஓர் அந்தணர் இருந்தார். அவர் வேதங்களிலும் வேதாங்கங்களிலும் சிறந்த புலமை பெற்றிருந்தார்; சிரௌதம், ஸ்மார்த்தம் என்ற இரு நெறிகளிலும் அவர் சிறிதும் தவறாமல் நின்றார்; அவர் நல்ல அழகுடையவர்; அவர் **பத்திரதையார்** என்ற • தம் இல்லக்கிழத்தியோடும் கிரகஸ்த தருமத்தை மிகச் சிறப்பாக நடத்தி வந்தார். அவ்விருவரும் அவ்வூரில் கோயில் கொண்டெழுந்தருளிய **விஞ்ஞானம்பாஸமேதரான விரூபாக்ஷப் பெருமானை** நாள்தோறும் வழிபட்டு வந்தார்கள். அப் பெருமானருளாலே அவர்களுக்கு ஒன்பது புத்திரர்கள் பிறந்தனர். சுபத்திரர், சங்கம் முதலிய நவநிதிகளும் தம்மிடம் ஒருங்கே

வந்தடைந்தாற்போன்று விளங்கிய தம் குமாரர்களைக் கண்டு மிகவும் மகிழ்ந்து, உரிய காலங்களில் அவர்களுக்குச் செய்விக்கவேண்டிய வைதிகக் கடமைகளைச் செய்வித்தும், வேதாத்தியானமும் ஸகலகலாவல்லமையும் கைவரச் செய்தும், அவர்களை வளர்த்துவந்தார். அப்புத்திரர்களுக்கு உரிய பிராயம் வந்தவுடன் அவர்களுக்குத் தக்க இடங்களில் கன்னிகைகளைத் தேடி விவாகங்களையும் செய்வித்து அவர்களோடு மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தார்.

இவ்வாறு சுபத்திரர் முதலியோர் வாழ்ந்து வந்த போது, கல்வி கேள்விகளிற் சிறந்தவர்களும், மிகுந்த ஒழுக்க சீலர்களுமான புத்திரர்கள் ஒன்பதின்மருக்கும் முத்தியடைய முயலவேண்டுமென்ற அவா உண்டாயிற்று. அவர்கள் ஒருநாள் தம் தந்தையை அணுகி, அவரிடம் தம் கருத்தை விண்ணப்பிக்க, அவர் மிகவும் மனமகிழ்ந்து அவர்களை நோக்கி, "உங்கள் அவா மிகப் புனிதமானது; இவ்வளவு காலம் நான் இவ்வுலகில் வாழ்ந்தும் எனக்கு உங்களுக்கு உண்டாகியிருப்பதுபோல் வைராக்கியமேற்படவில்லை. இவ்வளவு இளமையில் உங்களிடம் அது உண்டானது நம் முன்னோர் செய்த பேறேயாகும். முக்திக்குச் சாதனங்கள் பலவாகும். அவை ஒவ்வொன்றும் அடைவதற்கு எளிதன்று. ஆகவே நாம் அனைவரும் ஒருங்குசேர்ந்து இங்கிருந்து புறப்பட்டு க்ஷேத்ராடனம் செய்வோம். எந்த இடத்தில் நமக்கு வழி புலப்படுகிறதோ அங்கே தங்கி அதனை முயல்வோம்" என்று கூறினார்.

அக்குமாரர்களும் அதற்கு உடன்பட, சுபத்திரர் வழிச் செலவுக்கு வேண்டிய செல்வத்தையும், பிற

உபகரணங்களையும் எடுத்துக்கொண்டு, சிவபிரான் திருவருளை எதிர்நோக்கித் தம் மனைவி, புத்திரர்கள், அவர்களின் மனைவியர் முதலானவர்களோடு நாட்டிலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களுக்கெல்லாம் செல்லத் தொடங்கினர்.

அவர்கள் பல இடங்களையும் கடந்து புண்ணிய நதியான **காவிரியின்** இரு கரைகளிலுமுள்ள சிவஸ்தலங்களுக்கெல்லாம் சென்று, புண்ணிய தீர்த்தங்களில் நீராடியும், ஆங்காங்குக் கோயில்கொண்டெழுந்தருளியுள்ள சிவபெருமானையும் உமாதேவியையும் வழிபட்டும், இவ்வாறே நெடுந்தூரம் நடந்து, **சம்பு** முனிவரால் பூசிக்கப்பெற்றதும், சிலந்தியும் யானையும் வழிபட்டுப் பேறு பெற்றதுமான **திருவானைக்காவை யும்** தரிசித்துப் பூசனைபுரிந்து, அங்கே **ஸ்ரீ அகிலாண்டேசுவரி ஸமேதராய்க் கோயில் கொண்டருளும் ஸ்ரீ ஜம்புகேசுவரரிடம்** தம் கருத்தை விண்ணப்பித்தார். அங்கிருந்த பெரியோர்களிடமும் தம் ஐயத்தைத் தெரிவித்தார். அவருக்கு அவ்விடத்தில் தக்க விடை கிடைக்கவில்லை.

அங்கிருந்து அவர்கள் தெற்கு நோக்கிச் சென்றனர்; வழியில் **இந்திராணி** பூசை செய்து பேறுபெற்ற **கீரனூர்** என்ற ஸ்தலத்தை யடைந்து, **பெரியநாயகியுடன்** அங்குக் கோயில் கொண்டிருந்த **உத்தமநாதஸ்வாமியையும்,** அவ்வூருக்குமப்பால், **அஞ்ஞான நாசினி** என்ற நதிக்கரையில் **திருப்பனங்காடு** என்ற ஸ்தலத்தில் எழுந்தருளியிருக்கும் **மங்கலாம்பிகை ஸமேத தாலவனேசுவரரையும்** வணங்கினர்கள். அங்கிருந்தும் புறப்பட்டுச் சிறிது தூரம் சென்று **திருவரங்**

**குளமென்னும்** திவ்ய ஸ்தலத்தை யடைந்து அங்குள்ள தீர்த்தத்தில் நியமத்துடன் ஸ்நாநம் செய்து, அங்கு எழுந்தருளியுள்ள **சிவபிரானையும் பெரியம்மைப் பிராட்டியையும்** தரிசித்து, அதன் மேற்கே, எல்லாத் தேவர்களாலும், யோகிகளாலும், முனிவர்களாலும், பசு முதலிய பிராணிகளாலும் பூசிக்கப்பெற்ற மிகத் தூய்மையான **திருக்கோகர்ணம்** என்ற ஸ்தலத்தை அவர்கள் அடைந்தார்கள். அங்கேயுள்ள **மங்கள தீர்த்தத்தில்** அவர்கள் ஸ்நாநம் பண்ணி, **திருக்கோகர் ணேசுவரரையும் பெரியவம்மை** என்ற திருநாமத்துடன் விளங்கும் **புவனேசுவரியையும்** வணங்கித் துதித்துத் தங்களுக்கு அதுகாறும் நடந்தவைந்ததால் உண்டான ஏமாற்றத்தையும் இளைப்பையும் விண்ணப்பித்துத் திருவருளை நோக்கி அங்கேயே தவங் கிடந்தனர்.

அச் சமயத்தில் அந்த க்ஷேத்திரத்தில் நித்ய வாஸம் செய்யும் **மங்கணரென்னும்** யோகீசுரர் சுபத்திரரும் அவர் மைந்தர்களும் இருந்த சோர்வு நிலையைக் கண்டு மனந்தளர்ந்து, அவரை விசாரிக்க, அவர் தம் சோர்வின் காரணத்தை விரிவாகக் கூறினார். அவ்வரலாற்றைக் கேட்டு **மங்கணர்** பெரு வியப்படைந்து, இரண்டு நாழிகை நேரம் தியானத்தி லாழ்ந்தார். அப்பொழுதும் அவர்க்கு விளக்கமுண் டாகாமையால், அவர் சுபத்திரரை நோக்கி, “உலகங் களுக்கெல்லாம் தாயாகவும் தந்தையாகவும் விளங்கும் **பெரியவம்மையும் கோகர்ணேசுவரருமே** இந் நிலையி லிருந்து உங்களைக் காப்பாற்றவேண்டும்” என்று அநுக்ரகித்தார். அச் சொற்களால் சுபத்திரர் ஒரு வாறு உள்ளந்தேறி, ‘இறைவி விட்ட வழி விடுக’

என்று திட சித்தமுடையவராய் மங்கண முனிவரோடு பெரியவம்மையின் சந்நிதியில் சிலநாட்கள் தவம் புரிய, ஒருநாள் வானத்தில் ஓர் அசரீரி உண்டாகி, "அன்ப! உன் நன்முயற்சிக்குப் பலன் கிட்டும் காலம் நெருங்கி விட்டது; இந்த ஸ்தலத்திற்குத் தெற்கே ஒரு யோசனை தூரத்தில் **சத்தியகிரி** என்னும் பெயருள்ள **திருமெய்யம்** என்ற திவ்ய ஸ்தலம் இருக்கிறது. அதன் தென்மேற்குத்திசையிலே ஐந்து கூப்பிடு தூரத்திலே **இளையாற்றகுடி** என்ற திவ்ய நாமத்துடன் நமக்குப் பெரிதும் உகந்த ஒரு க்ஷேத்திரம் உண்டு. அங்கே யாம் **ஸ்வயம்புவாய்** சதாகாலமும் விளங்குவோம். உலக மாதா **நித்ய கல்யாணி** என்ற பெயருடன் விளங்குகின்றாள். எம்முடைய சந்நிதியிலே **சிவ தீர்த்தம்** என்ற பெயருடைய மகா பெரிய புண்ணிய தீர்த்தம் ஒன்று விளங்கும். அந்தத் தீர்த்தத்தில் நீங்கள் யாவரும் ஸ்நாநம் பண்ணுவீர்களானால் உங்களிடம் நீண்ட நாளாய் உள்ள ஐயங்களெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கிவிடும்" என்று கூறிற்று. இவ்வாறு அகஸ்தியர் காசி முனிவர்களுக்கு அருளினார் என்று சூதர் நைமிசாரணிய வாசிகளுக்குக் கூறினார்.

## 3. சுபத்திரர் முதலியோர் சித்தி பெற்றமை

இன்னும் சூதர் மேலேகூறுவார். "இவற்றைக் கேட்ட வஸிஷ்டர் முதலியோர் ஈசுவர கிருபையை நினைத்து மிகுந்த விம்மிதமடைந்து அகஸ்திய பகவானை

நோக்கி, "விந்திய மலையின் செருக்கையடக்கிய பெரியோய்! மிகுந்த ஆச்சரியத்தைக் கொடுக்கிறது இந்தச் சரித்திரம். சுபத்திரர் முதலியோருக்கு மேலே நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அறிய ஆவலுறுகிறோம்; அருள்புரிக" என்றலும், முனிவர் மிகுந்த உற்சாகத்துடன் மேலும் கூறலாயினர்.

"முனிபுங்கவர்களே! கைலாயத்தில் பிரமனிடமிருந்து நாரதர் கேட்டபடி மேல் வரலாற்றைக் கூறுவேன்; அசரீரியின் கூற்றைக் கேட்டுச் சுபத்திரரும் அவர் மைந்தர்களும் பெருவியப்பும் மகிழ்ச்சியும் கொண்டு, மங்கண முனிவருடன் **கோகர்ணேசுவரரையும் பெரியவம்மையாரையும்** பலமுறை வணங்கிப் போற்றிப் பிரியாவிடை பெற்றுத் **திருமெய்யம்** சென்றடைந்தார்கள்; அங்கே அவர்கள் யாவரும் **சத்திய புட்கரணியில்** நியமத்துடன் ஸ்நாநம் பண்ணி, **சத்ய கிரீசரையும் தேவியாரையும்** மிகுந்த பணிவுடன் வழிபட்டு, அவ்வண்ணமே **சாரங்கபாணிப் பெருமாளையும்** பூஜித்தார்கள். பிறகு அவ்வூரின் தென்மேற்றிசையிலுள்ள பெரிய வனத்துள் அவர்கள் நுழைந்து நெடுந்தூரம் நடந்தலைய அவர்களுக்கு மிகுந்த களைப்புண்டாயிற்று; தாகமும் அதிகமாயிற்று. இவற்றோடு அவர்கள் தள்ளாடித் தள்ளாடி நடந்து அசரீரியின் சொல் பழுதாகாது என்ற எண்ணத்துடன் அவ்வனத்தில் முன்னேறிக் கொண்டிருந்தனர்.

அச்சமயம் அவர்களுக்கு இறைவன் திருவருள் கைகூடினமையால், தன்னைத் தரிசிப்பவருக்கு மனவுறுதியை அளிக்கும், **சிவதீர்த்தம்** சிறிது தூரத்தில்

அவர்களின் கண்களில்பட, அவர்கள் அளவுகடந்த மகிழ்ச்சியுடன் அதனுள் இறங்கி ஸ்நாநம் செய்து, கருமாநுஷ்டானங்கள் எல்லாவற்றையும் குறைவற முடித்து, அந்நீரையும் பருகித் தங்கள் களைப்புத் தீர்ந்து அதன் கரையில் தங்கினார்கள்.

அவ்வாறு அவர்கள் இருந்தபோது **சிவபெருமான் உமாதேவி** பின்தொடர, இருவரும் சித்தர் உருப் பூண்டு அவர்களிருந்த இடம் நோக்கி வரலாயினர். அச்சித்தரின் சடை பவளம் போல் ஒளி வீசிற்று; மார்பில் யோகப்பட்டம் மிக அழகாக விளங்கிற்று; திரு அரையில் புலித்தோலுடை அசைந்தது; திருமேனி முழுதும் விபூதி துலங்கிற்று; அங்கங்க ளெல்லாம் ருத்திராக்ஷமாலைகள் நெருங்கின; சந்திரனை ஒத்த முகமண்டலத்தில் புன்னகை ஒளி வீசிற்று; கோடி மன்மதர்கள் ஒருங்கே கூடி ஓர் உருவெடுத்தாற் போன்ற அவருடைய திருமேனியினின்று வீசிய அழகொளி வனம் முழுமையும் பரவிற்று. அவரருகே உமா தேவியார் அழகே வடிவுகொண்டதோர் உருவொடும் வந்துகொண்டிருந்தார்.

தம்மை நாடினவரைத் தாமே வரிந்து ஆட் கொள்ளும் இயல்பினரான பரமேசுவரரைச் சுபத்திரர் முதலியோர் அவர் கொண்ட உருவத்தில் அறிந்து கொள்ளவில்லை; பெண்ணுடன் கூடி வருபவர் ஒருவரால் தமக்கு ஞானம் எவ்வாறு கைகூடுவது என்று அவர் ஐயமுற்றார். அவ்வாறே அவர் மக்களும் நினைத்தார்கள். அதனை அறிந்த ஐயன் தம் தேவியை நோக்கி, "இவர்கள் நம்மை அறிந்து கொள்ளாவிட்டா லும் நாம் இவர்களிடம் வலுவிற் சென்று இவர்களைத்

தடுத்தாண்டு இவர்களின் சந்தேகத்தைத் தீர்ப்போம்" என்று உரக்கக் கூற, அச்சொற்களைக் கேட்ட சுபத்திரர், "பெரியாரே! எங்கள் ஐயத்தைத் தாங்கள் உள்ளபடி அறிவீர்களானால் அதனை உரிய முறையில் தீர்த்தருள்க" என்று வேண்டினார். அதற்குச் சித்த உருவில் தோன்றிய சிவபெருமான் பின்வருமாறு கூறுவாராயினர்.

"பொருள் நிறைந்த வேதம் முதலிய நூல்களின் முடிந்த கருத்தை உங்களுக்கு இப்பொழுது தெளிவு படுத்துவோம். நான்கெனப்படும் புருஷார்த்தங்களுள் அறம், பொருள், இன்பம், என்ற மூன்றும் அழியும் தன்மையன. அழிவில்லாததான வீட்டுக்கு வழி **ஞானம்.** அந்த ஞானத்தை அடைதற்குரிய காரணங்கள் ஆரணங்கள் கூறும் **கருமமும், பக்தியும், யோகமும்** ஆம்.

பிரமமானது சச்சிதானந்த உருவமானது; மனம், வாக்குக் காயங்களுக்கு எட்டாதது; அருவமானது; குணங்களற்றது; செயலற்றது; ஞானமயமாய்த் திகழ்வது. அந்தப் பரப்பிரமம் அருளுருவமான மாயா சக்தியின் சார்பினாலே குணமுடையதாகி, யாவரும் வழிபடுவதற்கேற்ற நாமரூபங்கள் கொண்டு, உயிர்களுக்கு அருள்செய்து நிற்கும்.

அப்படிப்பட்ட பரமேசுவரரைப் புகலாகக் கொள்வது **பக்தி**; அப் பரசிவ வடிவுடன் மனம் ஒன்ற நிற்றல் **யோகம்**; வேதங்களில் விதிக்கப்பெற்று, ஸ்மிருதிகளாலே தெரிவிக்கப் பெற்ற செயல்களே **கருமங்களெனப்படும்.** பக்தி, யோகம், கருமம் இவற்றால் சித்த சுத்தியும், சித்த சுத்தியினால் விரக்தி

யும், விரக்தியினுல் சாந்தமும், சாந்தத்தினுலே தத்துவ ஞானமும் உண்டாகும். இந்த **ஞானமே** முத்திக்குச் சாதனம்.

ஞானம் என்பது **சொரூபத்தை உணர்தல்**; அவ்வுணர்ச்சியே முத்தியும் ஆகும். ஆனுல் அந்தச் சொரூப ஞானம் மிகவும் மறைக்கப்பட்டுள்ளது; அவ்வாறு மறைப்பன **மும்மலங்கள்**. அம்மலங்களை விவேகித்துணர்தலும் ஞானத்தின் பயனுகும்.

பக்தி என்பது நல்லோர்களின் சங்கத்தால் உண்டாகும். சங்கம் சிரத்தையாலுண்டாகும்; சிரத்தையும் சிரௌதம், ஸ்மார்த்தம் என்ற இருவகைகளான கருமங்களாலுண்டாகும்; இக்கருமங்களைத் தேரும் அறிவு வேதங்களினுலுண்டாகும்; வேதங்கள் ஆன்ருேர் ஒழுக்கத்தைத் தழுவிநிற்கும். ஆகவே **ஒழுக்கம்** மிகச் சிறந்ததாகிறது. ஒழுக்கமுடையவனுக்கே சித்திகள் கைகூடும்; அவனே இருமைப் பயன்களையுமடைவான்.

ஆகவே, **கருமம், பக்தி, யோகம் என்ற ஒன்ருேடொன்று சார்ந்த சாதனங்களைக் கையாண்டு, பெரியோர்களோடு சகவாசம் செய்து, இன்பத்தைத் தரும் மெய்ஞ்ஞானம் கைவரப்பெற்று, பிறவி சாராத் தன்மையதான முத்தியை அடைய வேண்டும்**" என்று கூறினுர்.

இவ்வுபதேசங்களைக் கேட்ட சுபத்திரரும் அவருடைய ஒன்பது குமாரர்களும் தம்மை நீண்ட காலமாய் வாட்டிவந்த சந்தேகம் தீர்ந்தவர்களாய், தம்முன் நின்ற சித்த உருவினரான தம்பதியரை நோக்கி, "ஐய! நாங்கள் எத்தனையோ காலமாக

எத்தனையோ இடங்களில் அலைந்தோம்; எவ்வளவோ பெரியோர்களை வினவினேம். அப்பொழுதெல்லாம் நீங்காது நின்ற எங்கள் ஐயங்களை நும் கடாக்ஷத்தாலும், இனிய சொற்களாலும் ஒரு நொடியில் தீர்த்துவிட்டீர்கள். இன்றுமுதல் எமக்குத் தலைவர் தாமே ஆவீர்';

**அத்தகு பெரும! நீயார்? அமர்வது எங்கு?எங் கிருந்தே**
**இத்தலந் தனக்கு வந்தாய்? இயம்பின்நீ மனுடன் அல்லை;**
**புத்தமு தருந்து கின்ற புலவனும் அல்லை; மேலாம்**
**சித்தியை உதவும் தொல்லைச் சிவபிரான் எனக்காண்**
**[கின்றாய்.**

பெருந்தகையீர்! தாங்கள் யாவர்? எங்கிருந்து இங்கு வந்தீர்கள்? தாங்கள் மானிடர் அல்லீர்? அமுதுணவு கொள்ளும் தேவருமல்லீர்! சித்திகளை யெல்லாம் உலகுக்கு உதவும் சிவபெருமானாகவே தாங்கள் காண்கிறீர்கள்! உண்மையை எளியேங்களுக்கு அநுக்கிரக்க வேண்டும்'' என்று விண்ணப்பித்தார்கள். அச்சொற்களைக் கேட்டசித்தர் வடிவத்தில் வந்தவர் வாய் பேசாமல், அருகில் நின்ற பராசக்தியை நோக்கிப் புன்னகை புரிய, இருவரும் எதிரிலிருந்த லிங்கத்தினிடத்திலே மறைந்தருளினார்கள்.

அவ்வரிய செயலைக்கண்ட சுபத்திரர் பெருவியப்புக்கொண்டு தம்மை ஆட்கொள்ளச் சித்த உருவில் தோன்றியவர் **பேரருள்** சமேதரான **பரம்பொருளே** என்பதை உணர்ந்து, அவர் மறைந்தருளிய லிங்கத்தினருகில் சென்று உற்று நோக்க, அதனில் திருச்சடையும் ருத்திராக்ஷமும் காணப்பட்டன; அவற்றைக் கண்டு அவர் பேராச்சரியம் கொண்டார்.

அவர் அவ்விடத்தில் சிவபெருமானுக்கும் பெருமாட்டிக்கும் ஆகம விதிப்படி விசேஷமான பூஜைகளையும் அர்ச்சனையாதிகளையும் செய்து வழிபட்டார். பிறகு சிற்ப சாஸ்திரங்களில் கூறியபடி அந்த லிங்கத்திற்கு விமானம் முதலியவற்றை அமைப்பித்து அங்கேயே சிலகாலம் தங்கிச் சிவபிரானுக்கும் தேவியாருக்கும் உவக்கும்படி தினந்தோறும் சிறப்பான பூஜைகளைச் செய்து, பலவிதமான பாடல்களால் தோத்திரம் செய்துவரலாயினர்.

இவ்வாறு வருங்கால் சுபத்திரர் ஒருநாள் இறைவர்க்கு வழிபாடு முதலியவற்றை மிகச் சிறப்பாகச் செய்து முடித்து, தம் மைந்தர் முதலியோருடன் அவர் திருமுன்பு நின்று, "எம்பெருமானே! எளியேனை ஆண்டருளினீர்கள்! எல்லாம் அறிந்த பெருமானே! உலகங்களுக்கெல்லாம் முதல்வரே! எளியேன் விண்ணப்பத்திற்குச் செவிசாய்த்தருள வேண்டுகிறேன். தேவரீருடைய தீர்த்த மகிமையால் நாங்கள் சித்தியடைந்தோம். ஆகவே இந்த க்ஷேத்திரத்துக்குச் **சித்த க்ஷேத்திர**மென்றும், இந்த மகாலிங்கத்திற்குச் **சித்தபதி** என்றும், இந்தத் தீர்த்தத்திற்குச் **சித்ததீர்த்த**மென்றும் பெயர்கள் உண்டாக வேண்டும்" என்று பிரார்த்திக்க, வானத்தில் **'ஓம்'** என்ற ஒலி மிகக் கம்பீரமாக எழுந்தது.

இதைக் கேட்டுச் சுபத்திரர் பரமேசுவரரின் பெருங்கருணையை எண்ணியெண்ணி வியந்தார். பிறகு அவர் தம் மக்களை அருகிலழைத்து, "என் அறிவு மிக்க மக்களே! இவ்வாழ்க்கையில் கொண்டுள்ள என் மனோரதம் நிறைவேறிவிட்டது; ஸர்வஞ்ஞரும்,

கருணாநிதியுமான, ஸ்ரீ மகாதேவரின் நாமத்தை என் இருதய கமலத்தில் நிலைநிறுத்தித் தியானித்துச் சிவோகம் பாவனை யடைந்து இடையறாத இன்பத்துள் ஆழ்வேன் ; நீங்களும் தரும நெறியில் வழுவாமல் நின்று மறுமைக்கு வேண்டுவனவற்றை நிகழ்த்துங்கள்'' என்று கூறி, அவர்களின் விடைபெற்று, அந்த க்ஷேத்திரத்திலேயே சித்த தீர்த்தத்தின் கரையில் ஓரிடத்தில் தங்கி, ஆழ்ந்த தவத்தில் அமர்ந்தார்.

தம் தந்தையிடம் தாம் கற்கவேண்டியவற்றையெல்லாம் முன்பு கற்றுமுடித்த அவர் தனயர்களும் அங்கேயே தவம்புரிந்து தம் கருத்திற்குத் தக்கபடி சித்திகளை யடைந்தார்கள். மூத்தவரான **உத்தாலர் ஹடசித்தர்** என்றும், இரண்டாமவரான **சாலங்கர் கருமசித்தர்** என்றும், மூன்றாவது குமாரரான **சுமனஸ்கர் பத்தி சித்தர்** என்றும், நான்காமவரான **கசோளர் வேத சித்தரென்றும்**, ஐந்தாம் புத்திரரான **சுசாந்தர் ஞான சித்தர்** என்றும், ஆறும் மகனுரான **சந்நிதி** என்பவர் **நாம சித்தரென்றும்**, ஏழாம் புத்திரரான **குலேசுரர் லயசித்தரென்றும்**, எட்டாம் குமாரரான **பாசகீர்ணர் காமசித்தர்** என்றும், கடைசிக் குமாரரான **நாடாயனர் தாரயோகி** என்றும் பெயர் பெற்றார்கள்.

இவ்வாறு இளையாற்றகுடியில் எழுந்தருளியுள்ள பரமசித்தரான எம்பெருமானின் திருவருளால் நவ குமாரர்களும் நவ சித்தர்களாகி, பல மூலிகைகளின் உபயோகத்தால் **ஆகருஷணம், ஸ்தம்பனம், நிக்கிரகம், அநுக்கிரகம்** முதலியவற்றில் வல்லவராகி, தாம் நினைத்தவிடத்திற்குச் செல்லக் கூடியவராயும்,

நினைத்தவற்றைச் செய்யவல்லாரயும் நெடுங்காலம் விளங்கி வந்தார்கள். சுபத்திரர் ஏகாக்ர சித்தத்துடன் தவத்தில் நின்று சிவசாயுச்சியம் அடைந்தார்.

அதுமுதல் இளையாற்றகுடியிலுள்ள சிவதீர்த்தம் **சித்த தீர்த்தமென்று** வழங்கப்பெற்றது. கைலாசநாதர் என்ற மகாலிங்கம் **சித்தேசுவரர்** என்றும் பெயர் பெற்றார். அந்த இடத்திற்கும் **சித்தவனம்** என்ற பெயருண்டாயிற்று. உத்தமோத்தமமான அந்த ஸ்தலத்தில் ஓராண்டு வசிப்பவர்க்கு அதன் மேல் ஜனன மில்லை. **கார்த்திகைச் சோமவாரம், சனிப் பிரதோஷம், சிவராத்ரி, ஜன்ம நக்ஷத்திரம், வியதீபாதம்** ஆகிய புண்ணிய நாட்களில் சித்த தீர்த்தத்தில் அன்போடு ஸ்நாநம் செய்பவர்கள் **ஸ்ரீநித்ய கல்யாணி அம்பாள்** ஸமேத **ஸ்ரீ கைலாசநாதரின்** திருவருளால் தாம் விரும்பிய யாவற்றையும் எளிதில் அடைவர்.

**இந்தநற் காதையை இயம்பு வோர்,மனம்**
**முந்திட ஒருவழிக் கேட்க லுற்றவர்,**
**அந்தமில் சித்திகள் அடைந்து, பின்னுற**
**முந்திய உணர்வுசார் முத்தர் ஆவரே.**

---

## 4. சூரன் தேவரைத் தேடவிட்டது

இவ்வாறு அகஸ்திய பகவான் கூறியருள, காசியிற் கூடியிருந்த முனிவர்கள் யாவரும் மிகுந்த வியப்படைந்து அவரை நோக்கி, "ஐய! **சித்த தீர்த்தத்தின்** மகிமையைக் கேட்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்தோம். சித்தவனத்துக்கு **இளையாற்றகுடி** என்ற

பெயர் அமைந்ததற்குக் காரணத்தை அறிய விரும்பு கிறோம்; கருணைகூர்க" என்று விண்ணப்பிக்கப் பொதிகை முனிவர் கூறலாயினர்.

முன்னொரு காலத்தில் **மாயாபுரம்** என்ற வளம் மிக்க நகரிலேயிருந்துகொண்டு அசுரர்களுள் மிகக் கொடியவனான **சூரபன்மன்** அரசாண்டு வந்தான். அவனுடைய மகன் **பானுகோபன்** தேவலோகத்தின் மீது படையெடுத்து இந்திரனையும் தேவர்களையும் முற்றிலும் முறியடித்து, தேவலோகத்தையும் கைப் பற்றிக் கொண்டான். அசுரர்களின் கொடுமைக்குச் சிறிதும் ஆற்றமாட்டாமல் தேவர்களனைவரும் பூலோகத்திற்கு ஓடிவந்தனர். அங்கும் அவர்கள் தங்கள் சுய உருவங்களோடு வாழ அஞ்சிப் பல பிராணிகளாகவும் பறவைகளாகவும் தங்களை மாற்றிக் கொண்டு வாழலாயினர். புண்ணிய நதிகளுள் புண்ணியம் நிறைந்த காவிரியின் இரு பக்கங்களிலும் உள்ள சிவ ஸ்தலங்களிலெல்லாம் அவர்கள் தாம் கொண்ட மாற்றுருவங்களுடன் தங்கிவரலாயினர்.

ஒருநாள் அவர்கள் அனைவரும் பிறரறியாமல் இரகசியமாகத் **திருவானைக்கா** க்ஷேத்திரத்தில் ஒன்று கூடித் தம் நிலையைக் குறித்து ஆராயலானார்கள். அப் பொழுது இந்திரன் அவர்களை நோக்கி, "**நமக்கு இப் பொழுது வந்துள்ள தீவினைக்கு நாமே காரணம்;** சிவபெருமானை விலக்கித் **தக்ஷன்** இயற்றிய யாகத் துக்கு நாம் சென்றது குற்றமல்லவா? அதன் வினைவை நம்மை யல்லாமல் வேறு யார் அநுபவிப்பர்? இப் பொழுது நமக்குப் புகலிடம் **அச் சிவபிரானேயன்றி** வேறெவருமிலர்; **சிவாபராதத்தைவிடக் கொடுமை**

**யானது பிறிதொன்றுமில்லை. அக்கொடுமையினின்று நம்மைக் காப்பாற்றுவது அவரருளேயன்றிப் பிறி தொன்றுமில்லை**; இந்த உண்மையை நாமெல்லோரும் நன்கு அறிய வேண்டும். ஆகவே அப்பெருமான் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் இடங்கள் தோறும் நாம் சென்று, அவரை வழிபட்டு, அவர் கருணையை நாடுவோமாக" என்று கூறினன். அவ்வாறே அவர்கள் செய்யத் தீர்மானித்தார்கள்.

இஃது இங்கு இவ்வாறிருக்க, மாயாபுரத்தில் **சூரபன்மன்** தேவலோகத்தைவிட்டு வெளியேறின தேவர்கள் எங்குச் சென்றிருப்பார்கள் என்றறிய விரும்பி ஒருநாள் சபையைக் கூட்டினன். அதனில் அவன் மந்திரிகளும், **தாரகன், சிங்கமுகன்** என்ற சகோதரர்களும், **பானுகோபன்** என்ற மைந்தனும், **சுக்கிராசாரியார்** என்ற புரோகிதரும் தத்தம் ஆசனங்களில் அமர்ந்து அசுரனுடைய ஆணையை எதிர்நோக்கியிருந்தனர்; சூரபன்மன் சபையினரை நோக்கி, "நம்மால் நன்கு முறியடிக்கப்பட்ட தேவர்கள் சென்றவிடம் விளங்கவில்லை. நான் அனுப்பிய தூதர்களும் மூவுலகங்களிலும் தேடி அலைந்தும் வெற்றிபெறுமல் திரும்பிவிட்டார்கள். அவர்களைக் கண்டுபிடிப்பதற்கு வழி யாது?" என்று வினவினன்.

**பானுகோபன்**, 'தேவர்கள் இறந்திருக்கக் கூடும்' என்முன்; அதனைச் சூரபன்மன் நம்பவில்லை; அமுதம் உண்டவர்களான தேவர்கள் சாகமாட்டார்கள் என்பது அவனுக்குத் தெரியும்; ஆகவே அவன் சபையோரை நோக்கி அவர்களிருக்குமிடத்தை ஆராய்ந்தறிவிக்குமாறு கட்டளையிட்டான். அதனைக் கேட்ட

**சுக்கிராசாரியார்** தாம் அறிந்ததை அரசனுக்குத் தெரிவிப்பதே தம் கடமை யென்பதை உணர்ந்து, அசுரனை நோக்கி, "மன்ன! தேவர்கள் மிக நுண்ணிய அறிவுடையவர்கள். பூமியில் அவர்கள் சிவபிரான் அருளை வேண்டி அவருக்குரிய க்ஷேத்திரங்களில் விலங்குகளாகவும் பறவைகளாகவும் மாறு வேஷம் பூண்டு மறைந்து வாழ்கிறார்களென்று எனக்குத் தோன்றுகிறது" என்றார்.

அச்சொற்களைக் கேட்டுச் சூரபன்மன் மிகவும் மகிழ்ந்து தன் சேனைவீரர்களான **வக்கிரதம்ஷ்டிரன், மகாதம்ஷ்டிரன், கும்பாண்டன்** என்பவர்களைக் கூப்பிட்டு, "நீங்கள் பெருஞ்சேனைகளுடன் பூலோகத்திற்குச் சென்று வனங்களையும் ஆலயங்களுள்ள பதிகளையும் அடைந்து, முனிவர் ஆசிரமங்களுக்கும் கோயில்களுக்கும் தீவைத்து, அங்கு வாழும் பறவைகளையும், விலங்குகளையும் பிடித்துவாருங்கள். இந்திராணி எங்கே இருக்கிறாள் என்பதை மனவூக்கத்தோடு தேடி அறிந்து வாருங்கள்" என்று கட்டளையிட்டான்.

உடனே கணக்கற்ற அசுரப் படைகள் புறப்பட்டன. அவர்கள் பூவுலகில் இறங்கி நடந்து வந்ததால் எழுந்த தூளி வானத்தை முட்டியது. அவர்களுடைய காலாட்களும், குதிரைகளும், யானைகளும் தேர்களும் எழுப்பிய ஒலி கடலோசையை அழுத்தியது. இவ்வாறு மிகக் கொடியவர்களான அசுரர்கள் வருவதைக் கண்ட **பிரகஸ்பதி** இந்திரனைத் திருவானைக்காவில் இரகசியமாகக் கண்டு, அவனுக்கு அசுரர் வரும் காரணத்தைக் கூறி எச்சரித்தார். அந்த

விடத்தைவிட்டு அவர்கள் கிளம்பி ஒருநாள் தங்கின விடத்தில் மறுநாள் தங்காமல் சிவபிரான் அருள் கிட்டும் வரை சென்றுகொண்டே இருக்க வேண்டும் என்றும் கூறி, அவ்வருளும் விரைவில் கைகூடுமென் றும் அவர் ஆசீர்வதித்தார்.

இந்திரன் இச்சொற்களைக் கேட்டான்; அசுரர் களின் முரசொலியும் அவன் காதில் விழுந்தது. அவன் உடனே தன் இனத்தாரிடம் நடந்துள்ளவற்றைக் கூறி, சிவபெருமான் அருளைத் தீவிரமாகச் சென்று அடையுமாறு அவர்களை வற்புறுத்தி, தானும் அச் செயலிலேயே ஆழ்ந்து அனைவருடனும் திருவானைக் காவைவிட்டு நீங்கி மேலே செல்லலானான். வழியில் **கீரனூரில்** சிவபிரானை வழிபட்டுக்கொண்டிருந்த **இந்திராணியையும்** அவன் அழைத்துக்கொண்டு, **திருமெய்யம்** என்ற தலத்தையடைந்தான். அசுரர்கள் அங்கும் தம்மைத் தொடர்ந்து வருவதை உணர்ந்து இந்திரன் அவ்விடத்தையும் விட்டு அகன்று மேலே விரைந்து செல்லலானான். அனைவரும் மிகுந்தகளைப் பினால் வருந்திச் சோர்ந்தார்கள். மேலே அடியெடுத்து வைக்கவும் பறக்கவும் இயலாதவர்களாகி அவர்கள் தங்கள் உருவங்களில் இருந்தபடியே, **'சிவபிரானே கதி'** என்று அவரைப் பலவாறு தோத்திரம் பண்ணத் தொடங்கினார்கள்.

***மாவுயர் சிவனே போற்றி! வன்துய ரடைத லுற்ற***
***ஆவிகட் குறவே போற்றி! அடியர் துன் பொழிப்பாய்போற்றி!***
***தேவருக் காதி யாய தேவெனும் திறத்தாய் போற்றி!***
***பாவுறும் பசுக்கட் கெல்லாம் பதியென நின்றாய் போற்றி!***

என்று இவ்வாறு அவரைப் பலவிதமாகத் துதித்தார்கள். அந்தகாசுரன், திரிபுரர், முதலான பல கொடியர்களை ஒழித்து முன்பு பலமுறை தம்மைக் காத்த இறைவனின் திருக்கருணையை நினைந்து நினைந்து உருகினார்கள். தமக்கு அப்பொழுது உண்டான **இளைப்பை** நீக்கியருள வேண்டுமென்று கண்ணீர் சிந்திக் கதறினார்கள்.

இவ்வாறு அவர்கள் வருந்திக்கொண்டே மெதுவாக நகர்ந்து தற்செயலாகப் **புராதனவன** எல்லைக்குள் புகுந்தார்கள். அவ்வாறு புகுந்தவுடனே சூரியனைக் கண்ட பனிபோல அவர்களுடைய இளைப்பும் சோர்வும் இருந்தவிடம் தெரியாமல் மறைந்தன. அவர்களுக்குப் புதிய ஊக்கமும் தைரியமும் உண்டாயின. இம்மாற்றத்தைக் கண்ட அவர்களின் மகிழ்ச்சிக்கும் வியப்புக்கும் அளவேயில்லை.

---

## 5. அசுரர் புராதனவனம் புகுந்தமை

இவ்வாறு, அச்சத்துடன் வழி தெரியாத காட்டில் நெடுந்தூரம் அலைந்ததால் உண்டான உடலிளைப்பும் மனச்சோர்வும் புராதன வனத்தினுள் புகுந்த அளவிலே தமக்கு ஒழிந்த தன்மையை நினைத்து, இந்திரன் முதலியோர் விம்மிதமும் வியப்பும் அடைந்து, "இவ்வாறு நேர்ந்தது இவ்விடத்தின் மகிமையாலோ? குருபகவான் **பிரகஸ்பதி**யின் அருளாலோ? அல்லது எங்கும் நிறைந்து விளங்கும் எம்பெருமான், **பரமேசுவரனுடைய கருணை**யாலோ?" என்று தமக்குள் பேசிக்கொண்டிருந்தபோது, வானத்தில் ஓர் அசரீரி

தோன்றி, "வாசவன் முதலிய வானவர்களே! கேண்மின்! இந்தத் தலத்தை நீங்கள் அடைந்த மாத்திரத்திலேயே உங்கள் தீவினைகள் நீங்கின; நீங்கள் செய்த தோத்திரங்களால் யாம் மனமுவந்து உங்களை இங்குக் கொண்டுவந்து சேர்த்தோம்; நீங்கள் நிற்கும் இவ்விடத்திற்கு அருகில் யாம் ஸ்வயம்புவாய் லிங்க உருவத்தில் விளங்கி வருகின்றோம். அதனைக்,

**கண்டதோர் பொழுதே அன்ன காட்சியின் பெருமையாலே,**
**அண்டர்காள்! நீவிர் நீங்கற் கரியவெம் பாவ மெல்லாம்**
**விண்டிடத் தூய ராகி மேவியே சிலகா லத்தில்**
**தண்டரு நிழற்கீழ் வாழும் தலைமையை அடைவீர் மன்னோ.**

[அண்டர்-தேவர். விண்டிடல்-நீங்கல். தண்தரு-கற்பகம்]

**கைலாச நாத**ரென்றும், **சித்தபதி** என்றும் பெயர் பெற்ற நம் தரிசனத்தில் உங்கள் கொடிய பாபங்களெல்லாம் தீமுன் நின்ற பஞ்சுபோல் அழிந்தொழியும்; உங்கள் பகைவரான அசுரர்கள் இங்கு வருவார்களாயின் அவர் தம் வலிமை ஒழியும். நீங்கள் மனமுருகிச் செய்த தோத்திரம் போன்றதை எவரேனும் செய்வாரானால் அவருடைய வருத்தங்களெல்லாம் அப்பொழுதே மாயும்" என்று கூறிற்று.

இவற்றைக் கேட்ட தேவர்கள் புளகாங்கிதம் கொண்டனர்; அவர்கள் கண்களினின்று ஆனந்த பாஷ்பம் அருவிகளாகப் பெருகிற்று; இறைவனின் கருணையும் இத்தகையதோ என்று அதனைக் கொண்டாடினர். அனைவரும் சிறிதும் தாழ்க்காமல் சிவபிரான் கூறிய லிங்கத்தினை நாடி வனத்தில் நாற்புறமும் சுற்றினர். அவர்களுக்குச் சடுதியில் கோடி சந்திரப் பிரகாசத்துடன் தன் நிலையை வீசிக்-

கொண்டு விளங்கும் **ஸ்வயம்பு மூர்த்தியின்** தரிசனம் கிட்டிற்று. அதன் சந்நிதியில் சிவபுண்ணியமே உருவெடுத்தாற் போன்ற **சிவதீர்த்தம்** என்றும் **சித்த தீர்த்தமென்றும்** வழங்கும் புண்ணியத் தடாகமும் காணப்பெற்றது.

இந்திராணியுடன் இந்திரனும், பிறதேவர்களும் மிகுந்த நியமத்துடன் சங்கற்பம் செய்துகொண்டு அத்தீர்த்தத்தில் இறங்கி ஸ்நாநம் செய்தனர்; அகமருடண மந்திரத்தை உச்சரித்தனர். அவ்வாறு அவர்கள் ஸ்நாநம் செய்து கரையேறி நின்றவுடன் முன்பு பறவைகளாகவும் விலங்குகளாகவும் தாம் கொண்டிருந்த வேடங்களெல்லாம் மாறி, ஒளி நிறைந்த தம் சுய தேவ உருவுடன் தாம் விளங்கு வதைக் கண்டு வியப்புற்றூர்கள்.

இவ்வாறு தமக்கு எதிர்பாராமல் கிடைத்த நல் அதிருஷ்டத்துக்கு ஈசுவரனே காரணம் என்பதை அவர்கள் தெரிந்துகொண்டு, தம் கண்முன் தோன்றிய மகாலிங்கத்திற்குச் சிறந்த முறையில் வழிபாடியற்றத் தீர்மானித்து, விபூதி ருத்ராக்ஷங்களைத் தரித்து, அபிஷேகம், சோடசோபசார பூஜை, அருச்சனை முதலியவற்றைச் செய்வதற்கு வேண்டிய பொருள் களை அவ்வனத்திலிருந்தே சேர்த்துக்கொண்டு, பஞ்சாக்ஷர ஜபம், தியானம், ஸ்தோத்திரம் முதலிய வற்றைச் செய்துகொண்டே இறைவரிடம் சென்று ஆகம முறைப்படி பூசனைகளைச் செய்து முடித் தார்கள்.

இவ்வாறு சில நாட்கள் இந்திராதியர் சித்தவனத் திலேயே தங்கி, நாள்தோறும் கைலாச நாதருக்குப்

பூஜை செய்து வருங்காலத்தில் ஒரு நாள் இந்திரன் **விசுவகர்மாவை** அழைத்துச் சிவபெருமானுக்குத் தக்கதோர் ஆலயத்தையும் அதனைச் சூழ்ந்து மிக அழகான நகரத்தையும் நிர்மாணிக்க வேண்டுமென்று கூறினான்.

அவ்வாறே தெய்வத்தச்சனான விசுவகர்மா, முன் தேவர்களின் தலைநகராயிருந்து இப்பொழுது சூரபன்மன் ஆளுகைக்குட்பட்ட **அமராவதியும்** அழகில் குறைந்தது என்று சொல்லும்படியான இரண்டு யோசனை அகலத்தில் ஓர் அழகிய நகரத்தையும், அதன் நடுவில் எம்பெருமான் **கைலாசநாதரும்,** பிராட்டி **நித்யகல்யாணியும், விநாயகர், குமரக்கடவுள்** பிற **பரிவாரதேவதைகள்** இவர்கட்கெல்லாம் அவரவர்க்கு ஏற்றபடி தனித் தனிக் கோயில்களும், பலவித மண்டபங்களும், பிராகாரங்களும், சுற்று மதில், கோபுரம் முதலியவற்றையெல்லாம் சிற்ப நூலின் இலக்கணங்கள் பொருந்த அமைத்தான். நகரில் ஆவண வீதிகள், தேரோடும் வீதிகள், அன்ன சாலைகள், தவச்சாலைகள், வேத ஆகமங்கள் பயிலும் சாலைகள், ஆதுலர்சாலைகள், வாவிகள், மடுக்கள், குளங்கள், சோலைகள், நந்தவனங்கள், பசுமடங்கள் ஆகிய பலவற்றையும் விசுவகர்மா ஆங்காங்கே நிருமித்து அந்நகரை வளப்படுத்தினான். தன்னைக் கண்டவர்கள், "இஃது ஆரணன் நகரமோ? அகிலம் காத்திடும் நாரணன் நகரமோ? ஞான மீந்திடும் காரணன் நகரமோ? இந்நகர் எந்நகர்கொல்?என்றையம் செய்யுமே!" என்று கூறுமாறு அஃது அமைந்தது. இவ்வாறமைந்த நகரம், இந்திரன் முதலானவர்களின்

இளைப்பை யெல்லாம் தவிர்ப்பதற்குக் காரணமா யிருந்ததால் அன்றுமுதல் **இளையாற்றகுடி** என்ற புகழ் நிறைந்த பெயரால் விளங்கி வரலாயிற்று.

இவ்வாறு இந்திராதியர்கள் நல்வாழ்வு பெற்று இளையாற்றகுடியில் ஸ்ரீ நித்ய கல்யாணியுடன் கூடிய ஸ்ரீ கைலாச நாதரைப் பூஜித்து வருங் காலத்தில், சூரபன்மனுடைய சேனைகள் வனங்களையும், கிராமங் களையும், முனிவர் ஆசிரமங்களையும் கொளுத்திக் கொண்டும், வழியிற்கண்ட பறவைகளையும் விலங்கு களையும் சாதுக்களையும் வதைத்துக்கொண்டும் நாடெங்கும் அலைந்தும் தேவர்களைக் காணமாட்டா மல் மனம் சலித்து இன்னது செய்வதென்று அறியா மல் ஓரிடத்தில் திகைத்து நின்றார்கள் அச்சமயத்தில் **நாரதமுனிவர்** அங்கே தோன்றி, தேவர்கள் **இளைசைப் பதியை** அமைத்துக்கொண்டு அங்கே சிவபெருமானரு ளால் மிகுந்த நலத்துடன் வாழ்ந்துவரும் செய்தியை அவர்களுக்குத் தெரிவிக்க, அசுரர்கள் மிகவும் களித்து இளைசையை நோக்கி மிகுந்த வீராவேசத்துடன் எழுந்தார்கள். அவர்கள் அந்த நகருக்கு அருகில் வந்தவுடன் காடுகளிலுள்ள மரங்களை வெட்டியும், பள்ளங்களைத் தூர்த்தும், தம் நால்வகைப் படையால் பெருமுழக்கங்களை எழுப்பியும், முன்னேறிவருவதை உணர்ந்த தேவர்கள் மிகவும் அஞ்சிக் கூட்டமாகக் கோயிலுக்குச் சென்று இறைவர்முன் சென்று பின்வருமாறு முறையிட்டார்கள்.

"திருமால் போன்ற வலியோர்கட்கும் புகலிட மான பெரியோய்! எம்மைக் காத்தருள்க! முத் தொழிலும் இயற்றும் மூல முதற்பொருளே!

எம்மைக் காத்தருளவேண்டும். மங்கை பங்கா! கருணாநிதியே! எங்கட்கு வேறு கதியில்லை. தங்கள் திருவடிகளே சரணம்! சரணம்! சூரனின் ஆட்கள் எம்மை நெருங்குகின்றனர்! எமக்குப் புகலிடம் வேறில்லை! காத்தருளவேண்டும்! என்று ஓலமிட்டனர்.

எளியார்க்கிரங்கும் எம்பெருமான் இவ்வாறு கூவிய தேவர்களின் முறையீட்டிற்குச் செவிசாய்த்தருளி, வானவர்பால் இரங்கி, "இப்பொழுது யாம் **வைரவ** உருவமெடுத்துக் கொடிய அசுரர்களை வதைத்து எளிய தேவர்களைக் காப்போம்" என்று திருவுளங்கொண்டு, அப்பொழுதே அவ்வுருவத்துடன் தோன்றலானார்.

அக்கினிச் சிகையொளி கனன்றெரிவதுபோலச் சிரசிலே சிவந்த சடை பிரகாசிக்கவும், கண்டவர்களை அச்சுறுத்தும் மூன்று திருக்கண்கள் முகத்திலே ஜ்வலிக்கவும், வக்கிர தந்தங்கள் இதழின் இரு பக்கங்களிலே காலவும், நா இரு கடைவாய்களுக்கும் சென்று அவற்றைத் தடவி நக்கவும், இரு திருச் செவிகளிலும் இரு குண்டலங்கள் அழகு செய்யவும், மலைபோலப் பருத்து விளங்கும் புயங்களில் கேயூரம் மின்னவும், சூலம், வாள், கபாலம், யோகதண்டம் என்றவை திருக்கைகளில் விளங்கவும், விரல்களில் நகங்கள் வச்சிரம் போல் ஒளிரவும், மார்பில் நாகயஞ்ஞோபவீதமும் ஆரமும் இலங்கவும், வாகனமாகக் கொண்ட **வேதஞானி** வலி கொள்ளவும், தாமாகவே அமைந்த எண்ணில்லாத் திருவாபரணங்கள் திருமேனியிலே துலங்கவும், பிரளயகாலத்து அக்னியையொத்த திருமேனியொளி

வானத்தொளியை விழுங்கிமேலெழவும், பூதம், பிசாசம், குரூரக்கிரகங்கள் போன்றவை கண்ட மாத்திரத்திலேயே அகன்றேடவும், சண்டமாருதத்தின் வேகம் மிகவும், இடியேற்றினும் ஆரவாரம் அதிகரிக்கவும், பகைவர் யாவரையும் ஒருங்கே தகிக்கும் வெற்றிப்பாடு மிகவும், அன்புடைய அடியார்களுக்குச் சேமநிதியாய் அவர்கள் துயரையெல்லாம் அகற்றும் பேரருட்குறிப்பு வாய்க்கவும், முன்னொரு காலத்தில் திருமாலும் நான்முகனும் தம்முள் பகைத்து அகங்கரித்துத் தாம் தாமே பெரியவர் என்று கலகஞ் செய்த நாளில் அவர்களின்முன் தோன்றிய இலிங்கோற்பவரைப்போன்ற வடிவம் கொண்டு, தேவர்களைக் கடாக்ஷித்து, 'தஞ்சமென நம்மை அடைந்த தேவர்காள்! அஞ்சாதீர்! அசுரர்களால் உமக்குண்டான அச்சத்தை ஒரு நொடியில் தீர்த்தருள்வோம். இங்கேயே இன்னம் சில காலம் இருங்கள்; **கந்தவேள்** உலக நன்மையைக் கருதித் தோன்றியிருக்கின்றான்; அவன் **சூரபன்மன்** முதலியோரைத் தொலைத்து உங்கட்கு விடுதலை அருள்வான்" என்றருள் புரிந்தார்.

இவ்வாறு சொல்லி வைரவர் தம், **ஞாளி** வாகனத்தில் ஏறிக்கொண்டு, தம் குமாரரான **விநாயக்கடவுள்** உடன் வர, தேவர்கள் புடை சூழ, நகரின் தென் கிழக்குத்திசையை நோக்கி நடந்து இரண்டு குரோச தூரம் செல்ல, அங்கே அவுணர்களின் சேனை கண்களிற்பட்டது. உடனே வைரவர் தம் குமாரரான விநாயகரை விளித்து, 'பகைப் படைகளையெல்லாம் ஒழித்திடுக' என்று கூற, கணபதி இந்திரனுடன் முன் சென்று, அசுரர்களுடன் கடும்போர் புரிந்து அவர்களை

வதைத்தொழித்தார்; வடுகப் பெருமானும் தம் திரு விழிகளால் அசுரர் படையை நோக்க, மிஞ்சியிருந்த சிலரும் வெந்தொழிந்தனர். இவ்விதம் அசுரர் படை ஒழிந்தது. தேவர்க்கு வெற்றி எய்திற்று.

இந்தப் புண்ணிய கதையைப் படிப்பவரும் கேட்பவரும், நோய்களெல்லாம் நீங்கி, செல்வங்களோடு மனத்தில் எண்ணியவை யெல்லாவற்றையும் பெற்று, வைரவமூர்த்தியினருளினாலே இறுதியில் மோக்ஷமும் அடைவர்; இஃது உண்மை.

---

## 6. அசுர சங்காரம்

வைரவக் கடவுளும் விநாயக மூர்த்தியும் தேவர்களுக்காக அசுரர்களுடன் போர்புரிந்து வெற்றி பெற்ற வரலாற்றைக் கேட்ட முனிவர்கள் கும்ப முனியை வணங்கி, "இறைவரை ஒத்த அறிவும் ஆற்றலும் படைத்த மாமுனிவரே! வடுகக் கடவுளும் மூத்த பிள்ளையாரும் அசுரர்களோடு போரிட்டார்களென்றால், அது மிகவும் பெரும்போரன்றோ! அதன் தன்மையைக் கேட்க விரும்புகிறோம்" என்று விண்ணப்பிக்க, முனிவர் சொல்லலுற்றார்.

விநாயகக் கடவுள் இந்திரனுக்குத் துணைவராய்த் தம்மீது போர்க்கெழுந்துவருவதைக் கண்ட **கும்பாண்டன்** தன் கோடிக்கணக்கான அசுரப் படைகளை அணிவகுத்து நின்று அவரை எதிர்த்தான். அவ் வீரர்கள் பல கொடிய ஆயுதங்களை அவர்மீது எறிந்தார்கள். கணேசர் தாம் ஒருவராகவே நின்று அவ் வாயுதங்கள் யாவற்றையும் பயனற்றனவாகச் செய்

தார். அசுரர் பக்கத்தில் எண்பதினாயிரம் யானை களும், இலக்ஷம் தேர்களும், இலக்ஷம் குதிரைகளும் கொல்லப்பட்டன. கும்பாண்டன் தான் அறிந்த மாயங்களையெல்லாம் கையாண்டு போரிட்டான். முடிவில் விநாயகர் தம் கையிலிருந்த அங்குசத்தை அவன்மீது பிரயோகிக்க, அஃது அக்கும்பாண்டனை ஒரு நொடியில் சங்கரித்துவிட்டு ஸ்ரீ கணபதி திருக் கரத்துக்குத் திரும்பிற்று.

இதைக் கண்ட எஞ்சிய அசுர வீரர்கள் அஞ்சி யோட, **வக்கிரதமிஷ்டிரன், மகாதமிஷ்டிரன்** என்ற இரண்டு வீரர்களும் அவர்களைத் தடுத்து நிறுத்தி, அவர்களுடன் இந்திரசகாயியாக நின்ற **விநாயகரை** எதிர்த்தனர். அவர்களுடன் அறுபத்தாறுகோடி அசுரர்கள் நின்றனர். போர் மிக மும்முரமாக நடந்தது. ஒரு சமயம் அசுரர்கள் யாவரும் விநாயக ரைச் சூழ்ந்துகொண்டார்கள். அதைக் கண்ட வைரவர் தம் ஆற்றலால் **ஆலகாலன், சோமகன், அக்கினிமுகன், காலவேகன்** என்ற நான்கு மகாவீரர் களைப் படைத்து, அவர்களை அசுரப்படையின் நான்கு திக்குக்களிலும் சென்று அப்படையைத் தாக்க ஏவினர். தாமும் போர்க்களத்துட் புகுந்து தம் சூலத்தால் எண்ணற்ற பகைவர்களின் உடல்களைக் குத்திக் கொன்றார். அச்சமயம் வக்கிரதமிஷ்டிரன் ஒரு மலையைப் பிடுங்கிக்கொண்டு விநாயகரை நோக்கி ஓடி வந்தான்; அதை விநாயகர் தம் அங்குசத்தால் உடைத்தெறிந்தார். பிறகு அவ்வசுரன் தன் கைத் தண்டத்தை அவர்மீது வீச, அவர் அதனைத் தம் துதிக்கையால் பிடுங்கியெறிந்து, அவனையும் கொன்

றருளினர். அச்சமயம் வைரவக் கடவுள் தம் சூலத்திஞல் மகாதமிஷ்டிரனைக் கொந்திக் கொன்ருர். இவ்வாறு மூன்று தலைவர்களும் போர்க்களத்திலே மடிந்துபோக எஞ்சிநின்ற அசுரர்கள் உயிர் தப்பினல் போதும் என்றெண்ணி ஓடிச் சூரபன்மனை அடைந்து நடந்தவற்றைக் கூறினர்கள்.

இஃது இவ்வாருக, இரு பெருங் கடவுளர் உதவியால் வெற்றிபெற்ற தேவர்கள் அக்கடவுளரை மனமார வாழ்த்தி வணங்கினர்கள். அப்பொழுது விநாயகரும் வைரவரும் அருகிலே தத்தம் பெயர்களால் **இரண்டு தீர்த்தங்களை** நிறுவி, அவற்றின் கரைகளிலே ஒவ்வொரு பட்டணத்தையும் கற்பித்தார்கள். அந்நகரங்களுக்குக் **விநாயக நகரம், வைரவ நகரம்** என்ற பெயர்களும் ஸ்ரீ கைலாசநாதராலேயே கொடுக்கப்பெற்றன. விநாயக தீர்த்தக் கரையில், வச்சிரதமிஷ்டிரனல் எறியப்பட்ட மலையின் **குகையையே** தம் திருக்கோயிலாக விநாயகக் கடவுள் கொண்டு, அங்கிருந்து இன்றும் உலகைப் பாதுகாத்தருளுகின்ருர்; வைரவக் கடவுளும் வைரவ தீர்த்தக் கரையில் தென் திசையை நோக்கிக் கோயில் கொண்டருளித் தம்மை வணங்கும் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் வேண்டிய வரங்களை அளித்து வருகின்ருர். இவ்விரு தீர்த்தங்களிலும் ஸ்நாநம் பண்ணி, இவ்விரு ஆலயங்களிலும் தரிசனம் பண்ணுவோர் தம் பகைவர்களிடமிருந்து அச்சம் நீங்கியும், பாவங்கள் கழிந்தும், சிறந்த புத்திரப் பேறடைந்தும் நீடூழி வாழ்வர்" இவ்வாறு அகத்தியர் வசிஷ்டர் முதலிய முனிவர்க்குச் சொல்லியருளினர்.

---

## 7. மயூரகிரியின் தோற்றம்

அகஸ்தியர் கூறிய வரலாற்றைக் கேட்ட முனிவர்கள் **சிவபிரானுக்கு அபசாரப்படுபவர் அடையும் இன்னல்களையும், அவர் சரணமே கதியாய்ப் புகல்புகுபவர்க்கு அப்பெருமான் புரியும் அளவுகடந்த கருணையையும்** எண்ணி யெண்ணி உடல் மயிர்க்கூச்செறிய, கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் சொரிய, அம்மாமுனியை நோக்கி, "ஐய! இந்திரனுக்காக விநாயகரும் வைரவ மூர்த்தியும் காட்டியருளிய பேரருளைக் கேட்டோம்; அசுரர்கள் மறிந்து முடிய, பிறகு மேல் நிகழ்ந்தவற்றையும் அறிய ஆவலுறுகிறோம்; அருள் புரிக" என்றலும், பொதிகை முனிவர் பேசத் தொடங்கினார்.

அசுரத் தலைவர்கள் இறந்தும், எஞ்சியவர் புறங்காட்டி ஓடியும் போனபின் இந்திராதி தேவர்கள் கைலாசநாதஸ்வாமி ஆலயத்துள் புகுந்து, அவர் தங்களுக்கு அன்று அருளிய உதவிக்காக அவரைப் பலவாறு தோத்தரித்து வணங்கி நின்றார்கள். அப்பொழுது சிவபெருமான் நித்திய கல்யாணி அம்மையாரோடும் இடப வாகனரூடராய் அவர்களுக்குக் காட்சியளித்தருளினார். அச்சமயம் எம்பெருமான் திருச்சடையில் கங்கையும் இளம்பிறையுமாகிய சிரோபூஷணங்கள் பொருந்த, நான்கு திருக்கரங்களிலே மான், மழு, அபயம், வரதம் ஆகியவை சேர, திருக்கண்டம் நீலமணிபோல விளங்க, கோடி சந்திரர் ஒருங்கே பிரகாசிப்பது போன்ற தம் திருமேனியின் இடப் பாகத்திலே கிளி போன்ற பசிய நிறமுடைய நித்யகல்யாணியம்மை பிரகாசிக்க, வாக்குக்கும் மனத்

துக்கும் எட்டாத திருமேனிநலம் தரிசிப்போர் உடல், பொருள், ஆவிகளை யெல்லாம் கவர, வேதங்கள் நான்கும் சூழ்ந்து நின்று துதிக்கக் காட்சி கொடுத்தருளும் கைலாசநாதஸ்வாமியைக் கண்டு, பேரார்வமடைந்து, பூமியிலே பல தரம் விழுந்து நமஸ்கரித்தார்கள்; எழுந்து ஆடினார்கள்; பாடினார்கள்.

பிறகு அவரை நோக்கித் தேவர்கள், "எம்பெருமானே! தங்கள் திருவருளினால் வைரவக் கடவுளும் விநாயக மூர்த்தியும் எங்களை எதிர்த்துவந்த அசுரக் கூட்டங்களை ஒழித்தருளினார்கள்; இப்பெருங் கருணையை நாங்கள் எவ்வாறு வாழ்த்துவோம்! இப்பொழுது எங்கட்குள்ளது ஒரே ஒரு விருப்பம், அஃதாவது, இந்த **இளைசையிலேயே** நாங்கள் எக்காலமும் தங்கித் தங்களைத் தரிசிப்பதொன்றையே பெரும் பேறாக நாங்கள் கருதுகிறோம். ஆனால், **சூரபன்மன்** எங்களை இங்கும் வாழவொட்டானே! இந்த அச்சத்தை நீக்கியருள வேண்டும்." என்று பிரார்த்தித்தனர்.

அதற்கு இறைவர், "நீங்கள் சிறிதும் அஞ்ச வேண்டா. **எம்மை அடைக்கலம் புகுந்தவர்களைக் காக்கும் பொறுப்பு எம்முடையது.** சூரபன்மன் முதலானோரைச் சங்கரிப்பதற்கே **ஷண்முகன்** சரவணப் பொய்கையில் அவதரித்திருக்கிறான். அவனை நீங்கள் உங்கள் சேனாபதியாகக் கொள்ளுங்கள். அவனையும் நாம் இங்கே இப்பொழுது வரவழைப்போம்" என்றருளி, மனஸிலே ஆறுமுகனை நினைத்தருளினார். அக்கணமே கார்த்திகேயர் மரகதமலை போன்ற தம் மயிலின்மீது எழுந்து வானவழியே இளைசையை

நோக்கி வர, அம்மை நித்யகல்யாணியின் தனங்களில் பால் சுரந்தது. முருகன் அருகில் வந்து, மயிலினின்று இறங்கித் தம் மாதா பிதாக்களை வணங்க, அவர்களிருவரும் குமரக் கடவுளைத் தம் திருக்கரங்களால் எடுத்துத் தழுவி, உச்சிமோந்து, மடிமீது இருத்தி அவரைத் தம் இருவருக்கும் இடையே அமர்த்திக்கொண்டனர். **ஸத் ஆகிய சிவபெருமானுக்கும், சித் ஆகிய அம்மையாருக்கும் இடையே ஆனந்தமூர்த்தியாகிய ஆறுமுகன் அமர்ந்திருந்த ஸோமாஸ்கந்த மூர்த்தத்தைத்** தேவர்கள் கண் களிப்பக் கண்டு ஆனந்தங் கொண்டனர்; விழுந்து, விழுந்து வணங்கினர்; கண்களில் நீர் சோர, வாய் தழுதழுக்க அம்மூவரையும் புகழ்ந்தனர்.

அப்பொழுது இறைவர் முருகப்பிரானை நோக்கி, "குமர! இத்தேவர்கள் சூரபன்மனுக்கு அஞ்சி, குலைந்து, என்னைச் சரணடைகின்றனர்; இவர்களைக் காக்கவே உன்னை நான் இங்கு வர எண்ணியதாகும்; ஆதலால், இவர்களுக்குச் சேனுபதியாம் தன்மை பெற்று, அசுரர்களையெல்லாம் சங்கரித்து, உலகங்களைப் பாதுகாப்பாயாக" என்றருளினர். தேவர்களும் முருகக் கடவுளைத் தேவசேனுபதியாக்க அபிஷேகம் செய்தற்குரிய இடத்தைத் தேர்ந்தெடுத்து, அவருக்கு முறைப்படி அபிஷேகத்தை நடத்தித் தம் தலைவராக ஏற்படுத்திக் கொண்டனர். அச்சமயம் சிவபெருமான் சக்தி என்னும் வேற்படையை அருள, முருகப்பிரான் அதனுடன் தன் சேனை பின் தொடர, வான வழியாக மாயாபுரத்துக்குச் சென்று, அங்குப் போருக்கெழுந்த தாரகன், சிங்கமுகன் முதலியவர்களையும் இறுதியில் சூரபன்மனையும் மாய்த்துத் தேவர்

களுடனே இளையாற்றகுடி நகரை அடைந்து தம் பெற்றோர்களை வணங்கினின்றார். ஸ்ரீ கயிலாச நாத ஸ்வாமியும் ஸ்ரீ நித்தியகல்யாணியம்மையும் தம் குமாரரால் உலகத்திலுள்ள இன்னல்களெல்லாம் ஒழிந்தமை கண்டு அவரைப் பெரிதும் பாராட்டினர். முருகப்பிரான் திருவருளால் இந்திரன் தான் இழந்த தேவலோகத்தைத் திரும்ப ஆள அனுமதி பெற்றான்.

இவ்வாறு தேவர்களுக்கு மங்கலங்களெல்லாம் பெருக, அவர்கள் ஒருங்கு சேர்ந்து ஸ்ரீ கைலாசநாத ஸ்வாமியின் திருவடிகளில் விழுந்து, "ஐயனே! எம் வேண்டுகோளுக்குச் செவி சாய்த்தருள வேண்டுகிறோம். நாங்கள் எந்தப் பிரபுவின் பேரருளால் எங்கள் முன் நிலைமையை அடைந்தோமோ, அந்தப் பிரபு எங்கள் சேனபதியாக அபிஷேகம் செய்து கொண்ட இடத்தில் நித்யமும் வாழ்பவராய் அமைய வேண்டும். அந்த இடம் இந்த இளைசை நகரத்துக்குத் தென் கிழக்குத் திசையிலே மூன்று கூப்பிடு தூரத்திலுளள தெய்விகம் பொருந்திய **மயூரகிரி** என்ற குன்றாகும்" என்று வேண்ட, ஈசுவரரும், அம்மையும், முருகக்கடவுளும் அதற்கு இசைந்தனர்.

அவ்வாறே முருகக் கடவுள் தேவர்களுடன் அங்குச் சென்று, சரவணப் பொய்கை என்ற தீர்த்தமொன்றை உண்டாக்கி, அதில் யாவரும் ஸ்நாநம் பண்ணி, மலைமீது எம்பெருமானருளால் இந்திரன் எழுப்பிய தெய்விக ஆலயத்தில் **முருகப்பிரான் தம் இரு** பத்தினிமாருடனும் கோயில் கொண்டருளினார். அங்குத் தேவர்களெல்லோரும் சென்று,

**திருமலர் மலர்ந்த தன்ன திருமுக மாறுந் தெய்வக்**
**குருமணி மகுட மாறும் கோதில்நல் அடியார் தங்கட்(கு)**
**அருளுறு விழிமூ வாறும் மணிக்குழைக் குழையீ ராறும்**
**மருவொளிச் சத்தி யாதி வான்படைக் கரமீ ராறும்.**

**கனகவுத் தரியத் தோளும் கண்டிகை முந்நூன் மார்பும்**
**புனைதுகில் அரையும் பொன்போல் பொலிதிரு வடியும்**
**[பொற்ப**

**வனைதரு மயில்மேற் கொண்டு வனிதையர் இருபால் மன்ன**
**நனிதரி சிப்போர்க் கென்று நல்வரம் நல்கி வைகும்.**

இவ்வாறு மயூரகிரி என்ற **குன்றக்குடியில்** முருகப்பிரான் செந்தாமரை மலர்கள் மலர்ந்தாற் போன்ற ஆறு திருமுகங்களும், தெய்வரத்ன கிரீடங்கள் ஆறும், அடியார்களுக்கு அருள்செய்யும் திருக்கண்கள் மூவாறும், இரத்தின குண்டலங்கள் குழைந்து விளங்கும் திருச்செவிகள் ஈராறும், சக்திவேல் முதலிய படைகள் விளங்கும் பன்னிரு திருக்கைகளும், பொன் உத்தரீயம் விளங்கும் திருத்தோள்களும், கண்டிகையும் பூணூலும் பொலியும் திருமார்பும், பொன்னுடை அணிந்த திரு அரையும், பொன்போலப் பொலிந்த திருவடியும், உடையராய் அழகிய மயில்வாகனமேற் கொண்டு, தேவிமாரிருவரும் இருபக்கங்களிலும் மேவத் திருவோலக்கங்கொண்டு, உலகமெல்லாவற்றையும் உய்விக்க வீற்றிருந்த காட்சியைக் கண்டு தேவர்கள் பெருமகிழ்ச்சியும் வியப்பும் கொண்டு, அவர் திருவடிகளில் விழுந்து நமஸ்கரித்துப் போற்றத் தொடங்கலாயினர்.

"வீரர்களுள் வீரரே! விழுத்தகும் பெரியோய்! சிவபிரான் களிக்கும் வடிவுடையோய்! ஜோதி

மயமானவரே! அளவிட இயலா வலிமையுடையோரே! ஆறுமுகம் படைத்த பெருமானே! அடியார்களின் துன்பத்தைத் துடைப்பவரே! சிவபெருமானின் அருமைப்புதல்வரே! கங்கையில் தோன்றியவரே! கார்த்திகேயரே! மயூரகிரிமீது கோயில் கொண் டருளுபவரே! திருவருளே வடிவானவரே! போற்றி! எங்கள் கண்மணியே! போற்றி! வள்ளி, தெய்வயானை நாயகா! நமஸ்காரம்! கிருபாசமுத்ரமே! போற்றி" என்று பலவாறு புகழ்ந்து, பிரியாவிடை பெற்றுக் கொண்டு தம் தேவலோகம் சென்றனர்.

முனிவர்களே! கைலாசநாதஸ்வாமியின் மகிமை யையும், இளையாற்றகுடி என்று பெயர் வந்ததற்குக் காரணத்தையும், வைரவ நகரம், விநாயக நகரம், இவை தோன்றிய வரலாற்றையும் பிரம்மதேவன் நாரதமுனிவருக்குச் சொன்னவண்ணம் நாம் உங்களுக் குக் கூறினோம்; இச் சரித்திரம் மிகவும் பரிசுத்த மானது; பாவம் யாவற்றையும் போக்கும். சித்த தீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணி, கைலாஸநாதஸ்வாமி யைத் தரிசித்து, இந்தச் சரித்திரத்தைக் கேட்பவர் வீட்டில் மகாலக்ஷ்மி எப்பொழுதும் பிரஸன்னமா யிருப்பாள்" என்று முனிபுங்கவரான அகஸ்தியர் காசி மாநகரில் முனிவர்கட்குக் கூறியபடி சூதமா முனிவர் நைமிசாரணிய முனிவர்கள் ஸத்ரயாகம் செய்த காலத்தில் கூறியருளினார்.

---

## 8. கண்ணுவ முனிவர்க்கு உற்ற குறை

மேலும் அவர்,

இவற்றையெல்லாம் கேட்டும் மனத்திருப்தி யடையாத வஸிஷ்டர் முதலியோர் தமிழ் முனிவரை வணங்கி, "கைலாசநாதஸ்வாமியின் வரலாற்றைக் கேட்கக் கேட்க அதி அற்புதமாயிருக்கிறது. ஆரா வமுதமான இச்சரித்திரங்களை இன்னும் கேட்டு ஆனந்திக்க அவாவுகின்ருேம்" என்று விஞ்ஞாபிக்க, சகலகலா வல்லரான கும்போற்பவர், "வேதங்களில் வல்லோர்களே! கைலாசநாதஸ்வாமியின் மகிமையில் உங்கள் மனம் ஈடுபட்டமையால் நீங்கள் மிகுந்த பாக்கியசாலிகள். இளையாற்றகுடி என்னும் பெயர் வர இன்னொரு காரணமும் உண்டு; அதையும் கூறு கின்றேன்" என்று தொடங்கிக் கூறலாயினர்.

முன்னொரு காலத்தில் கங்காநதிக் கரையிலே **கண்ணுவர்** என்ற முனிவர் தவம் புரிந்துகொண்டிருந் தார். அவர் புருகுர்ச்ச முனிவரின் குமாரர்; திரிடுதச் சியுவின் சகோதரர்; பராநங்கையின் கணவர். அவர் வேதம், தருமசாஸ்திரம், புராணம் முதலியவற்றின் கரைகண்டவர்; யோகசாஸ்திரம் கைவந்த முனிவரர்; அவர் சடை முடித்து, உணவை நீக்கி, ஐம்புலன்களை யும் அடக்கி, மோன முத்திரையையும் சின் முத்திரை யையும் கொண்டு, சுவாசம் விடுதலைத் தடுத்து, இதய கமலத்திலே சோதியாயும், பரமாற்புதமாயும், பரமா காசமாயும், போதமாயும், பரமானந்த வடிவாயும் உயிர்க்குயிராயும், பரம்பொருளாயும் விளங்கும் பரமசிவத்தை வேறுபாடறத்தியானித்து, ஸ்தம்பம்

போல் வெகுகாலம் அசைவற்றிருந்தார். அவருடைய உடலைக் குற்றியென்று கருதி வனவிலங்குகள் தம் உடல்களை அதன்மீது தேய்த்துக் கொள்ளலாயின; பறவைகள் அவர் சடையுள் கூடுகட்டின. அவர் பிராணவாயுவை இடை, பிங்கலை என்ற நாடிகளின் ஊடு செல்லவிடாமல் தடுத்துச் சுழுமுனையிலே ஏறச் செய்தார்; இரு கண்களையும் நாசி நுனியில் வைத்து, ஒரே நினைவினராய்ச் சிவபிரானையே தியானித்து வரலாயினர்.

அவருடைய உச்சந் தலையிலிருந்து தவ ஜ்வாலை கிளம்பித் தேவருலகத்தை எட்டிற்று. அதை உணர்ந்த இந்திரன், அவர் தவத்தை உடனே நிறுத்தா விட்டால், தன் பதவிக்கே ஆபத்தாகும் எண்றெண்ணி னன். அவருடைய தவத்தைக் கலைத்தற்குரிய வழியை அவன் நெடுநேரம் ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்தான். முனிவர் முன்னே அவன் ஒரு வாளைக் கிடத்தினன். தன்னை ஒரு வயோதிக அந்தணனுகவும், ஒரு கொடிய புலியாகவும் செய்து கொண்டு, அப்புலி அவ்வந்தணனைக் கொல்ல வருவ தாகவும் நடித்தான்.

அந்தணன் மிகுந்த வயோதிகனுய், நரைத்துத் திரைத்து நடக்கவும் இயலாமல் தள்ளாடிக் கொண்டு கண்ணுவர் முன்பு வந்து விழுந்து, "ஐயா! முனிவரே! ஒரு கொடிய புலி என்னைக் கொல்லத் துரத்திக் கொண்டு இதோ வந்துவிட்டது; இந்த வாளை எடுத்து அப்புலியைக் கொல்லும்; என் உயிர் உம் அடைக் கலம்" என்று கூறி அழுதான். அவன் விபூதி, ருத்ராக்ஷங்களைக் கண்டும் அவன் நிலையைக் கண்டும்

கண்ணுவர் மனம் தடுமாறலுற்றது. இதற்குள் புலியும் அங்கு வந்துவிட்டது; கண்ணுவர் உயிர்க் கொலையின் தீமையை அதற்கு விரிவாக எடுத் துரைத்து, அவ்வந்தணனை விட்டுவிடுமாறு அதனிடம் கூறினார்.

அப்புலியோ, "முனிவரே! புண்ணியம், பாவம் என்றவை உம்மைப் போன்றவர்க்கே. மனிதன் எனக்கு உரிய உணவு; அவனை நான் வேட்டையாடி எனக்கே உரியவனாக்கிக் கொண்டேன்; இதை நீர் தடுப்பதால் பாவம் உமக்கே ஆகும்" என்று கூறி, அவனை இழுத்துக்கொண்டு ஒரு புதருக்குள் மறைந் தது. அந்தணன் உரக்கக் கதறிக்கொண்டே முனிவர் கண்களினின்று மறைந்தான்.

இக் கொடுங்காட்சி முனிவருடைய உள்ளத்தை அசைத்துவிட்டது. அவர் தவம் கலைந்தது; அந்தண னுடைய சாவுக்குத் தாமே காரணம் என்று அவரெண்ணினார். அவர் தம் தந்தையினிடமும் சகோதரரிடமும் உத்தரவு பெற்று மனைவியோடு புண்ய க்ஷேத்ராடனமும் புண்ய தீர்த்த ஸ்நாநமும் செய்யத் தீர்மானித்தார். தமக்கு மனச் சாந்தி யுண்டாகும் வரையில் இவ்வண்ணமே அலைந்து கொண்டிருக்க அவர் திட்டமிட்டார்.

அவர் கங்காதீரத்திலிருந்து தம் பத்தினியுடன் புறப்பட்டுப் பல புண்ணிய க்ஷேத்திங்களைத் தரிசித்துக் கொண்டே ஐந்துஆண்டுகள் கழித்துக் காவேரி தீரத்திற்கு வந்து சேர்ந்தார். ஜம்புகேசுவரம் முதலிய காவிரிக்கரை க்ஷேத்திரங்களைக் கடந்து, இராமேசுவரம், கந்தமாதனபருவதம், முதலிய வேறு க்ஷேத்திரங்களுக்

கும் சென்று அவர் திரும்பினார். வழியில் கோகர்ணம், திருமெய்யம் என்ற இடங்களுக்குச் சென்று, ஆங்காங்குக் கோயில்கொண்டருளிய சிவ பெருமானைத் தரிசனம்செய்து தம் குறையைக் கூறி முறையிட்டார். அவர் மனக்குறை நீங்கவில்லை; முடிவில் இறைவன் திருவருள் அவர்பால் சுரக்கும் நற்காலம் தோன்றின தால், அவர் தாம் உணராமலே புராதன வனத்தை வந்தடைந்தார்.

---

## 9. கண்ணுவமுனிவர் பேறுபெற்றமை

அப்புராதன வனத்தில் அவர் காலடி வைத்த வுடனேயே கதிரவனைக் கண்ட இருள்போல அவர் மனத்தில் நின்ற பெருஞ்சுமை போனவிடம் தெரியாமல் மறைந்துவிட்டது; அவர் புதிய மனிதரானார்; அவருடைய உடலிலிருந்த இளைப்பெல்லாம் அகன்று விட்டது. அப்பொழுது அவருக்கு உண்டான வியப்புக்கு எல்லையில்லை. அவர் தமக்குண்டான மாற்றத்தைத் தம் பத்தினியிடம் கூறி, "இந்த இடம் யாதோ? இதன் பெருமைதான் என்னே! பல ஆண்டுகளாய் என்னைப் பீடித்திருந்த கொடுமை மாயமாய்ப் பறந்ததே! இத்தனை க்ஷேத்திரங்களிலும் தீர்த்தங்களிலும் தீராத பாவம் இங்குத் தீர்ந்ததே! இதன் மகிமையை என்னென்பேன்! என்று கூறினார். அப்பொழுது அசரீரி ஒன்று ஆகாயத்திலிருந்து, 'தவப் பெருங் கண்ணுவ! இவ்வனத்தில் நீ வந்து புகுந்த வுடன் உன் சஞ்சலம் நீங்கிற்று; இனி நீ செய்யத் தகுவனவற்றையும் கேள்; இவ்விடத்திற்கு அருகே

சுயம்புலிங்கமொன்று பிரகாசிக்கிறது; அதன் சந்நிதியில் புண்ணியமே வடிவமான சித்த தீர்த்தமென்பதொன்றுண்டு. அதில் ஸ்நாநம் செய்து மகாலிங்கத்தையும் பூஜிக்கக் கடவை" என்று கூறிற்று. அதைக் கேட்ட முனிவர் தம் உரோமம் சிலிர்க்க, கண்களிலிருந்து நீர் வார, அசரீரி எழுந்த இடத்தை நோக்கிப் பல முறை தண்டனிட்டு எழுந்து, **இளைசை மாநகரைக்** கண்டு, இந்திரன் நிர்மாணித்த நகரையும், அதன் வீதிகளையும், ஆலயங்களையும் பார்த்துப் பெரு வியப்புக் கொண்டார். பிறகு வைதிக முறைப்படி சித்த தீர்த்தத்தில் அவர் தம் மனைவியோடு ஸ்நாநம் செய்து, இறைவனையும் அம்பிகையையும் ஆகமங்களில் கூறியபடி ஷோடச உபசாரங்களுடன் பூஜித்து, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தையும் தேவியினுடைய மந்திரத்தையும் பதினோராயிரம், பதினோராயிரம் உருக்கள் ஜபம் செய்து, அங்கிருந்து **விநாயக தீர்த்தம், வைரவ தீர்த்தம்** என்றவற்றிற்கும் சென்று அங்கும் ஸ்நாநம் பண்ணி, அம்மூர்த்தங்களையும் வழிபட்டார். இவ்வாறே செய்யும் நியமமுடையவராய் அவர் தம் பத்தினியுடன் இளைசையில் ஓராண்டு தங்கிக் கைலாஸநாதஸ்வாமி பூஜையில் ஈடுபட்டிருந்தார்.

அவ்வாண்டு முடியும் எல்லையில் கண்ணுவர் அம்பிகைக்குரிய மந்திர ஜபத்தில் ஆழ்ந்திருந்தபோது, அம்பிகை தம் பிம்பத்தினின்றும் புறப்பட்டு, தேஜோமயமான உருவத்துடன் தோன்றி, முனிவரின் கையைப் பிடித்து எழுப்பி, அவருடன் இறைவர் சந்நிதிக்குச் சென்று, "எம்பெருமானே! இவன் நம்மை நோக்கி எண்ணிறந்த காலம் கொடுந்தவம்

புரிந்தான். எல்லாம் வல்ல மங்கலரூபியே! இம் முனிவனுக்கு ஸகல கல்யாணங்களையும் அருள வேண்டுகிறேன்" என்று மும்முறை விஞ்ஞாபித் தருளினாள். உடனே, லிங்கத்தினின்று சிவபெருமான் கங்கையும் இளம்பிறையும் தரித்த சடையும், திருமேனியெங்கும் தரித்த திருநீறும், உருத்திராக்ஷ மாலையும், நாகயஞ்ஞோப வீதமும், புலித்தோலுடை யும், கோடிசூரியப்ரபையும், கோடிமன்மத அழகும் பொலியத் தோன்றி, அம்மையாரின் திருக்கரத்தைப் பிடித்துக்கொண்டு முனிவரின் முன்னே நின்றார்.

அக் காட்சியைக் கண்ணுவர் தம் இரு கண்களா லும் **கண்டார். அவரைப் பற்றியிருந்த பாசங்களெல் லாம் அகன்றொழிந்தன.** அவர் அம்மையின் திருக் கரம் ஸ்பரிசம் பெற்ற தம் கைகளை உச்சிமேல் கூப்பி, கண்களினின்று ஆனந்த பாஷ்பம் ஆறாகப் பெருக, நாத்தழுதழுக்க, இறைவரை நோக்கி, "நித்தியமாயும், பராபரமாயும், நான்மறைப் பயனாயும், சுத்தப் பொருளாயும், பரம்பொருளாயும், பிரமமா யும், உலகத்துக்குக் கருத்தாவாயும், உலகத்தைத் தாங்குபவராயும், தந்தையாயும் நிற்கும் **சித்தவன** நாயகரே! தேவரீருடைய திருவடிகள் துதிக்கப்படு வன. ஆன்மாக்களுக்கெல்லாம் சாக்ஷியாயும், உயிர்க் குயிராயும், உயர்வுக்குயர்வாயும், முத்தியளிப்பவரா யும், அனந்த சக்திமானாயும், சகலாகமங்களாலும் போற்றப்படும் திருவடிகளையுடைய சித்தவன நாயகரே! நும் பாதுகைகள் துதிக்கப்படுவன. ஞேயமாயும், ஞானமாயும், ஞாதுருவாயும், பிரமனும் நாடரிய ஒளியாயும், அருள்விளையாடல்களைப் புரியும்

பதியாயும், சனகாதி முனிவர் தொழும் இன்பச் சோதியாயும் நின்ற தேவரீர் திருவடிகளிரண்டும் துதிக்கப்படுவன. காலமெல்லாம் கடந்த பொருளா யும், திரிபுரர்களுக்குக் கூற்ருயும், அந்தகனுக்கு அந்தகராயும், சந்திரகலாதாரியாயும், மங்கல சீலரா யும், கதிகளையருளும் செல்வராய் நின்ற சித்தவன நாயகரே! நும் திருவடிகள் துதிக்கப்படுவன. சுவயம்பு வாயும், பெரியோர்களால் வணங்கப் பெற்றவராயும், வேண்டுவார் வேண்டியபடி வேண்டுவனவற்றை அருளும் வள்ளலாயும், சத்திமயமாயும், மலநோய் களைத் தீர்த்தருளும் தீர்த்தராயும் நின்ற சித்தவன நாயகரே! தேவரீர் திருவடிகள் துதிக்கப்படுவன."

இவ்வாறு இறைவரைத் துதித்துப் பின் அம்மையை நோக்கி, 'ஒருத்தி என்றும், பிரகிருதி என்றும், புராணி என்றும், நாநாவித வித்தையென் றும், விசுத்தையென்றும், விபுதர்தொழும் பதத்தி என்றும் எவரை நல்லோர்கள் கூறிப் போற்றுகின்றூர் களோ அத்தகைய அன்னையே! நமஸ்காரம்; நீ உண்மை அறிவானந்த வடிவினள்; பரவித்தை; நிருமலை; பரமான்மா; உலக முழுதும் இடையீடின்றி வியாபித்து நிற்பவள்; அத்தகைய அன்னையே! நமஸ்காரம்!

எண்ணில்லாத கற்ப பேதங்களிலே பாசத்தாலே மூடுண்ட சகல உலகங்களையும் படைத்துக் காத்துத் துடைப்பவள் நீயே! அவ்வுலகங்களுக்கு வேருய், அருளே தனக்குரிய வடிவாய், சோதியாய் நிற்பவள் நீ! பரசிவையே! உன் திருவடிகளில் வணங்கு கிறேன்.

நீ பெருமையும், பெருந்தலைமையும், சர்வ வல்லமையும், உயிர்களுக்கு இன்னருள் புரியும் தன்மையும் நிரம்பிய மாதா ஆவாய். முனிவர்கள் யாவரும் உன்னையே வணங்குகின்றனர்; உலகங்கள் எல்லாம் உன் படைப்பு; அவை விளங்குவதும் உன்னாலே! உன் ஆதரவிலே அவை யாவும் தங்குகின்றன. நித்யமான இன்ப நிலையுடையவளே! கைலாசநாதஸ்வாமிக்குத் தேவியே! விரும்பிய பேற்றினையளிக்கும் தயாளுவே! எனக்கமைந்த அருளே!"

என்றெல்லாம் தோத்திரித்து, உரோமாஞ்சலி கூர, கண்களினின்று ஆனந்த பாஷ்பம் பொழிய, கூத்தாடி நின்றார். இவற்றைக் கண்ட இறைவர் அருள்கூர்ந்து கண்ணுவரை நோக்கி, "அன்ப! நீ எதற்கும் அஞ்சவேண்டா. நீ செய்யும் தவத்தினைக் கண்டு, இந்திரன் தன் பதவிக்கே மோசம் வருமோ என்றஞ்சி, உன் தவத்தைக் கலைக்கத் தானே புலியும் பிராமணனுமாய் வந்தான். எக்காரணத்தாலும் உயிர்க்கொலை கொடிய பாதகமாதலால், அப் பிராமணனைப் புலி இழுத்துச் செல்லக் கண்ட உனக்குக் கொலைத் திருஷ்டியால் உண்டான பாவம் உண்டாயிற்று. இவ்வனத்துக்கு நீ வந்து, இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, எம்மையும் தரிசித்த தால் உன் பாவங்களெல்லாம் நீங்கின; உனக்கு மங்கலம் உண்டாகுக. நீ விரும்பும் வரங்களைக் கேள்," என்று கூறினார்.

அச்சொற்களைக் கேட்ட முனிவர், "அம்மையும் அப்பனுமான தங்கள் இருவர் தரிசனமும் கிடைத்த எனக்கு, இன்னும் பெறவேண்டும் பேறு உண்டோ?

எனினும் அருளாணையைக் கடவாமல் விண்ணப்பிப்பேன் :

எனக்குக் கல்யாணம் உண்டாக அருளவேண்டுமென்று தேவரீரைப் பிரார்த்தித்ததால் அம்மையின் திருப்பெயர் **நித்யகல்யாணி** என்று இனி வழங்க வேண்டுகிறேன். என் இளைப்பை யெல்லாம் இந் நகரம் தீர்த்தமையில் இதன் பெயர் **இளையாற்றகுடி** என்று ஆக வேண்டுகிறேன் ; நான் கங்கைக் கரையில் நெடுநாள் தங்கி அப்புண்ணிய நதியில் ஸ்நாநம் பண்ணி வந்தேன் ; பிறகு உலக சஞ்சாரம் செய்து வந்த காலத்தில் சேதுவில் சில தினம் தங்கினேன். இனி, அந்த இடங்களுக்கெல்லாம் செல்ல மனமில்லை; ஆகவே இங்கேயே அக்கங்கையையும் சேதுவையும் வரவழைத்துக் கொடுத்தருள வேண்டுகிறேன்" என்று விண்ணப்பிக்க ஸ்ரீ கைலாசநாதஸ்வாமி 'அவ்வாறே ஆகுக' என்றருளினார்.

அன்றுமுதல், சித்த தீர்த்தத்திற்கு மேல் பாகத்திலே **சேதுகங்கை** என்ற தடாகம் ஒன்று விளங்கி வருகிறது. முனிவரும் அங்குள்ள தீர்த்தங்களில் ஸ்நாநம் பண்ணிக்கொண்டு, ஸ்ரீ கைலாசநாதஸ்வாமியையும் ஸ்ரீ நித்யகல்யாணி அம்மையையும் ஸோஹம் பாவனை செய்து தவம் செய்துகொண்டு அங்கேயே தங்கிவரலாயினர்.

---

# 10. பூம்புகார்ப் படலம்

சோழநாட்டிலே திருவெண்காடு என்னும் திவ்ய க்ஷேத்திரத்தின் அண்மையிலே, காவிரி கடலில் கலக்கும் இடத்திலே **காவிரிப்பூம்பட்டினம் என்ற** மிகப் பெரிய நகரம் ஒன்று இருந்தது. அது செல்வத்திற் சிறந்த மக்களால் நிரம்பியிருந்தது. அங்கு வைசியர்கள் பலர் உழவு, வாணிகம் என்றவற்றில் மிகுந்த வளமை மிக்கவர்களாய் வாழ்ந்திருந்தனர். அவர்கள் சிவபக்தி, சிவபுண்ணியம் இவற்றில் மேலோங்கியவாரயும், அடக்கம், பொறுமை, வாய்மை, கொடை, இரக்கம் இவற்றில் நிகரற்றவராயும் வாழ்ந்து வந்தனர். இவ்வாறிருந்துவரும் காலத்தில் ஒரு சமயம் அவர்கள் சிவநெறி நீங்கி நடக்கத் தொடங்கினமையால் அவர்களின் செல்வம் குறைந்து வறுமை மிகத் தொடங்கிற்று. **தெய்வபக்தியும் தருமமும் இல்லா விடத்தில் திருமகள் தன் மூத்தவளைக் காட்டிவிட்டு அகன்று விடுவாளன்றோ?** வயல்கள் வளம் குன்றின; வாணிகம் மங்கியது; அவர்களால் அந்த ஊரில் இருந்து வாழ முடியவில்லை.

ஆகவே, அவர்கள் ஒரு கூட்டமாகக் கிளம்பி நாடெங்கும் சுற்றியலையத் தொடங்கினார்கள். தென்னாட்டிலுள்ள பல புண்ணிய தீர்த்தங்களிலும் அவர்கள் ஆடி, பல சிவ க்ஷேத்திரங்களிலும் தரிசனம் செய்து, கடைசியாக விராட்புருஷனின் இருதய ஸ்தானமான சிதம்பரத்துக்கு வந்து, சிவகங்கையில் நீராடி, நித்ய ஆனந்தநடனம் ஆடும் நடராஜப் பெருமானைப் பொன்னம்பலத்திலே கண்ணாரக் கண்டு, கும்பிட்டு, வெளியே வந்தனர்.

பல நாள் உணவில்லாமையாலும், நீண்ட தூரம் அலைந்தமையாலும் அவர்கள் வீதி வழியே மிகவும் சோர்ந்து சென்றுகொண்டிருந்த போது **அகோர சிவாசாரியார்** என்ற பெரிய சிவ யோகியை அவர்கள் கண்டார்கள். சிவாசாரியார் ஓர் அந்தணர்; வேதங்களின் கரை கண்டவர். அகம் புறம் என்னும் இரு கரணங்களையும் அடக்கியவர்; பழமையாகிய நல்லொழுக்கமுடையவர். சிவ நூல்கள் யாவற்றையும் தேர்ந்தறிந்தவர்; தவநெறியில் நிற்பவர்; சிரௌத ஸ்மார்த்தங்களிலே வல்லவர்; எவரிடத்தும் மிக்க இரக்கமுள்ளவர்; பிரமசரிய விரதமுடையவர்; சிவோகம் பாவனையுள்ளவர்; பொன்னைக் கல்லோடென்று மதிப்பவர்.

இப்படிப்பட்ட பெரியோர் காவிரிப்பூம்பட்டினத்து வைசியர் தம் மனைவி மக்களோடு பசியால் வாடி வதங்குவதைக் கண்டு மனமிரங்கித் தம் சீடர்களைக் கொண்டு அவர்களுக்கு நல்ல உண்டியளித்தார். பிறகு அவ்வணிகர் அப்பெரியோரை வணங்கித் தமக்கு நற்காலம் வரும்படி அநுக்கிரகிக்க வேண்டுமென்று விண்ணப்பிக்க அப்பெருமான், இவர்களுக்குண்டான துன்பத்துக்குக் காரணம் இவர்கள் சிவபெருமானை மறந்ததேயாகும் என்பதை அவர்களுக்கு எடுத்துக்கூறி, அவர்களுக்குப் பஞ்சாக்ஷர மந்திரத்தை உபதேசம் செய்து, சிவ தருமங்களை அவர்களுக்குக் கூறி அவற்றைத் தவறாமல் செய்துவந்தால் அவர்களுடைய செல்வம் பெருக்கமடையும் என்று ஆசீர்வதித்து, விபூதியையும் அவர்களுக்கு அளித்தனர். அவற்றைப் பெற்று, வணிகர் யாவரும் தம் குடும்பங்

களுடன் மிகுந்த மகிழ்ச்சியோடு திரும்பவும் காவிரிப் பூம்பட்டினம் புகுந்து தம் ஆசாரியர் அருளிய வழியே ஒழுகிவர, அவர்களின் மறைந்த செல்வ மெல்லாம் திரும்பவும் தோன்றலாயின.

---

## 11. அகோர சிவாசாரியர் வரலாறு

இக்கதையைக். கேட்ட முனிவர்கள் மிகுந்த வியப்படைந்து அகஸ்திய முனிவரை நோக்கி, "கடல் குடித்த பெருமை வாய்ந்த முனிபுங்கவ! **அகோரசிவாசாரியார்** என்ற ஒருவர் காவிரிப் பூம்பட்டின வணிகர் குலத்தினர் அனைவரையுமே உய்வித்தனர் என்று கேட்க மிக்க இறும்பூது உண்டாகிறது. அப்பெரியார் யாவர்? அவர் தோற்றம் யாது? அவர் பெருமைகள் யாவை? இவற்றை யெல்லாம் எமக்கு விரிவாக அருள்புரிவீராகுக. தாங்கள் எங்கட்குக் கூறிவரும் கதைகளான அமிருதத்தை எவ்வளவு பருகினுலும் எங்கட்குப் போது மென்ற திருப்தியுண்டாகவில்லை" என்று கேட்டனர். அவற்றைக் கேட்ட அகஸ்தியர் பின்வருமாறு கூறியருளினர் :—

'போக வடிவுகொண்டு போகங்களை அருளியும், யோகவடிவுகொண்டு யோகங்களைச் செய்வித்தும், உக்கிர வடிவுகொண்டு வினைகளை வீட்டியும், இவ்வாறு தாம் படைத்த ஜீவராசிகள் உய்யும் பொருட்டு அலகிலாத் திரு விளையாடல்களைப் புரிந்து வரும் பரமேசுவரர் கைலாயத்தில் ஒரு தினம் தம் சிங்காதனத்தினின்றும் இறங்கி, உலோக மாதாவான உமா

தேவியோடும், அம்மலைச் சிகரங்களில் சிருங்காரமான காட்சிகளைக் கண்டு திருவருள் புரிந்துவந்தபோது, அவருடைய ஐந்து முகங்களுள் ஒன்றுனதும், தெற்கு நோக்கி விளங்குவதுமான **அகோரமுகத்தில்** ஒரு வியர்வைத்துளி அரும்ப, அதனை அன்னை தம் திருக் கையினுலெடுத்து, அருகிலிருந்த கங்கையில் விட்டருளி னுள். அதுவே, சிவபெருமானின் ஆஞ்ஞையால் ஒரு குழந்தை ஆயிற்று.

இஃதிவ்வாருக, கங்கைக் கரையிலே, காசிக்கு அருகிலே **கோவிந்தஸ்வாமி** என்ற பெரியார் தம் பத்தினி **சுசீலா** தேவியோடு ஒரு பர்ணசாலை யமைத்துக்கொண்டு சிவ தருமங்களைக் கையாண்டு கொண்டும், சிவ நூற்பொருள்களை ஆராய்ந்து கொண்டும் இருந்துவந்தனர். அவர் ஒரு நாள் அதிகாலையில் தம் பத்தினியுடன் கங்கைக்கு நீராடச் சென்றபோது, ஒரு மணற்குன்றிலே சந்திரவிம்பம் போன்ற ஓர் ஆண் குழந்தை கிடக்கக் கண்டார்; மீன் போன்ற கண்களையும், குருந்து முகைபோன்ற பற்களையும், கொவ்வைப்பழம் போன்ற சிவந்த வாயையும், சங்குபோன்ற கழுத்தையும், தாமரைத் தண்டு போன்ற தோள்களையும், பொன்போலப் பொலிந்த சரீரத்தையும் கண்டு, "இஃது வெறும் மானுடக் குழந்தையன்று" என்று அவர் வியந்தார். அப்பொழுது அக்குழவி தன் காற் பெருவிரலை வாயில் வைத்து ஒரோரு சமயம் சுவைத்துக் கொண்டும், மற்ருெரு சமயம் யாழோசை போன்ற இனிய குரலில் அழுதுகொண்டுமிருந்தது.

சுசீலையார், தம் கணவரின் குறிப்பறிந்து, குமாரக் கடவுள் போல விளங்கிய அக்குழவியைத், தழுவி யெடுத்து, தம் மடிமீது வைத்து அதன் திருமுகத்தைப் பல முறையும்பார்த்து, உச்சி மோந்து, அதன் உடலிற் பட்ட தூளியைத் தம்முடைய முன்தானையால் துடைத்தார்; அச்சமயத்தில் அவருடைய தனங்களில் அமுதம் சுரக்க, அவ்வம்மை பெரிதும் வியந்து, அக் குழந்தைக்குப் பாலூட்டினுர்.

அச்சமயம் வானத்தில் அசரீரி தோன்றி, "அந்தண ! இப்பாலன் நம்மிடத்திலே தோன்றியவன்; புத்திரனை விரும்பி நீ நெடுங்காலம் நம்மிடம் பிரார்த் தித்து வந்தமையால் இவனை உன்னிடம் கொடுக் கிறோம். இவனுக்கு **அகோர சிவனென்று** நாம கரணம் செய்யக் கடவாய்; இவனுல் உனக்கு மிகுந்த பெருமையுண்டாகும்" என்று கூறிற்று.

கோவிந்தஸ்வாமியும் சுசீலையம்மையும் தமக்கு நேர்ந்த பேரருளை எண்ணிச் சிவபெருமானுக்குப் பலவாறு நன்றி கூறி அப் பாலனுக்கு அவ்வப் பொழுது செய்ய வேண்டிய ஸம்ஸ்காரங்களை யெல்லாம் செய்தளித்தனர். அகோர சிவனுர் வேதங் களிலும் அவற்றின் அங்கங்களிலும் மற்றெல்லாக் கல்வித் துறைகளிலும் தமக்கெவரும் இணையில்லை யென்னுமாறு விளங்கி வந்த காலத்தில், பிரமனின் மனஸிலே தோன்றியவரும், ஞானபோதத் தலைமை யுடைவருமான **சனற்கார மகாமுனிவர்** அகோர சிவனுர் முன் எழுந்தருளி அவருக்குக் **காமிகம்** முதலான ஆகமங்கள் எல்லாவற்றையும் உபதேசித் தருளினுர்.

இவ்வாறு சகலகலா வல்லராக விளங்கிய அகோர சிவனார் தம் பெற்றோர்களின் அநுமதிபெற்றுப் பூலோக கைலாசமென்று விளங்கும் **சிதம்பரத்திலே** சில காலம் வாழ விரும்பி அங்கு வந்தடைந்து, தமக்கென ஒரு வாசஸ்தலத்தை ஏற்படுத்திக் கொண்டார். அங்கு அந்தணர்க்குரிய நித்திய நைமித்திக ஒழுக்கங்களிற் சிறிதும் வழுவாதவராயும், சிறந்த மந்திர யோகம், ஹடயோகம், தாரயோகம், நாதயோகம், லயயோகம், ராஜயோகம் என்ற யோகத்துறைகளி லெல்லாம் கரைகண்டவராயும் விளங்கினார். அவருடைய திரிபுரண்டரமாக அமைந்த வெண்ணீற்றையும், அங்கமெல்லாம் நிறைந்த உருத்திராக்ஷ மணிமாலைகளையும், நியதியாய்ச் செய்துவரும் சிவ பூஜை விசேடங்களையும், இயற்றிவரும் சிவோகம் பாவனையான தவநெறியையும் கண்டு அவரைத் தரிசனம் செய்தவர் எவரும் வியப்பில் ஆழாதவர் இலர். அவர் வேதசிரசும் சோதிடமும் வடித்தெடுத்த வன்மையாளராகவும், முக்காலமுமுணரும் ஆற்றலுடையவராகவும் ஜீவதயையும் பரோபகாரமும் நிறைந்த பரமதயாளுவாகவும் திகழ்ந்துவந்தார்.

இஃது இவ்வாறிருக்க, அகோர சிவாசாரியாரின் பரிபூரண அருளைப்பெற்ற புகார் வணிகர்கள் மிகுந்த செல்வத்துடன் வாழ்ந்து வந்து கொண்டிருந்த காலத்தில் சோழநாட்டில் பெரும்பஞ்சமொன்று உண்டாக, அந்நாட்டரசன் வருவாயில்லாமல், காவிரிப்பூம் பட்டின வணிகர்களை மிகவும் துன்புறுத்தி அவர்களுடைய செல்வங்களையெல்லாம் பறிக்கலாயினான்.

இக் கொடுமையினின்று தப்ப வழியில்லாமல், அவ்வணிகர் யாவரும், தம் குடும்பங்களுடன் அந் நகரை விட்டு மறுபடியும் கிளம்பி, தம் அருள்குரு வாழ்ந்து வந்த சிதம்பரத்துக்கு வந்து, அவரைத் தரிசித்து, வணங்கித் தமக்கு நேர்ந்த இன்னல்களை யெல்லாம் கூறி, உய்ய வழிகாட்டுமாறு வேண்டிக் கொண்டார்கள்.

அகோரர், சிவபெருமானின் அருள் திறத்தை ஆராய்ந்து, சிவபெருமான் எழுந்தருளியுள்ள ஸ்தல புராணங்களைக் கூறும் நூல்களையெல்லாம் எடுத்துப் படிக்க, **இளைசை** மான்மியம் படிக்கப் பெற்றபொது, அதன் பெருமைகளையெல்லாம் செவிமடுத்த பூம் புகார் வணிகர்கள், தம் ஆசிரியரை நோக்கி, "ஐய! அண்டினவர்களின் இளைப்பையெல்லாம் தீர்த் தருளும் ஒரு புண்ணியத் தலம் இருக்குமாயின், நாங்கள் குடியேற அதைவிட ஏற்றமான வேறு ஓர் ஊர் உண்டோ? அந்த **இளைசைப் பதி** எங்குள்ளது? அதனை ஆள்பவர் யார்? அங்கு நாங்கள் சென்று தங்க விரும்புகிறோம்; உதவியருள்க" என்றனர்.

அச் சொற்களைக்கேட்ட முனிவர் மனமகிழ்ந்து, "அன்பர்களே! நீங்கள் நேர்மையான முடிவையே செய்துள்ளீர்கள். **இளைசைப் பதி பாண்டி நாட்டி லுள்ளது**; பாண்டி மன்னன் உலக மாதாவான **மீனாட்சியம்மையின்** வழி வந்தவன்; சிறந்த சிவபக்தன்; அவனுடைய குரு **ஸ்ரீ ஈசான சிவாசாரியார்** என்னும் ஞான நிதி; எனக்கும் ஆப்த நண்பர். அங்கே நாம் செல்லலாம்" என்று சொல்ல, வணிகர் யாவரும் மிகுந்த மகிழ்ச்சியுடன் தம் குருவைப் பல்லக்கில்

ஏற்றிக்கொண்டு, சிலநாட்கள் பிரயாணம் செய்து முடிவில் மதுரைமாநகரையடைந்தனர். அங்கு, வேத வொலியும், ஆகமவொலியும், புராணவொலியும் நீங்காததாய், மெய்யுணர்வுடைய யாவர்க்கும் புகலிடமாய் விளங்குவதான ஸ்ரீ ஈசானசிவாசாரியார் திருமடத்தில் ஸ்ரீ அகோரசிவாசாரியாரைக் கொண்டு சேர்த்து, தாங்கள் மதுரை வணிகர் வீதியினுள் புகுந்து அவர்களால் உபசரிக்கப்பெற்று அங்கே தங்கலாயினர்.

---

## 12. ஈசான சிவாசாரியார்

அகத்திய முனிவர் இவ்வாறு அருள, அவ் வரலாற்றைக்கேட்ட முனிவர்கள் மிகவும் வியந்து "பெரும! ஈசான சிவாசாரியார் என்றவர் யாவர்? அவர் பெருமைகள் யாவை?" என்று வினவ, கலசோற்பவர் பின்வருமாறு கூறலாயினர்:

"துவாபரம் என்னும் யுகம் முடிந்து, கலியுகம் தொடங்கினபின் உலகத்தில் அறங்களெல்லாம் நலியத் தொடங்கின. பல்லோரும் விபூதி ருத்திராக்ஷங்களை வெறுத்தனர்; பஞ்சாக்ஷரம் ஜபிக்கப்படவில்லை; சிவபுண்ணியங்களெல்லாம் இகழப்பட்டன.

திருக்கோயிற் பணிகளுக்கு ஆட்கள் இல்லை. பொதுக் கிணறு, குளம் முதலியவை வெட்டலும், சத்திரம் சாவடி முதலியவை கட்டலும், அன்ன தானம் முதலியவை செய்தலும் கைவிடப்பட்டன. ஜீவகாருண்யம் அறவே மறக்கப்பட்டது. இவற்றையெல்லாம் **உலகமாதாவும் அறம் வளர்ப்பவளுமான**

**உமாதேவி** கண்டு தம் மக்கள் நரகத்துக்கே வழி தேடுபவர்களாக ஆனமையை உணர்ந்து, மிகவும் வருந்தி, சிவபெருமானை நோக்கி, "நம் குழந்தைகள் இவ்வாறு அஞ்ஞானத்தில் கிடந்து உழலலாமா? சிவபக்தியின் சம்பிரதாயத்தை மறுமுறையும் பூமியில் நிலையுறச் செய்தருளவேண்டும்" என்று விண்ணப் பிக்கக் கருணாநிதியான பெருமாள் தம் ஈசான முகத்தி னின்று ஒரு கலையைப் பூவுலகுக்கு அனுப்பியருளினார்.

அதுவே பூமியில் **மாண்டவிய கோத்திரத்திலே** போதாயன சூத்திரத்திலே தோன்றிச் சிவபெருமான் திருவடிகளில் எப்பொழுதும் தியானத்துடன் விளங்கும் ஓர் அந்தணருக்குக் குழந்தையாகத் தோன்றிற்று. அக்குழந்தை வளர்பிறைபோல வளர்ந்து பிரமசரிய மடைந்ததும் வேதாகமங்களில் நிகரற்ற அறிவும் சிவபெருமான் பூசையில் எப்பொழு தும் ஈடுபாடும் பெற்று விளங்கிற்று. எம்பெருமானின் உயர்ந்த முகத்தினின்று தோன்றிய காரணத்தை உல குக்குக் காட்ட அவர் **ஊர்த்துவசிகை** அணிந்திருந்தார்.

இவ்வாறு விளங்கிவந்த **ஈசான சிவாசாரியாரின்** பெருமைகளைக் கேள்வியுற்ற பாண்டிய மன்னன் தன் நாட்டில் கலியினால் நலிவுண்டாகாமற் பாதுகாக்கும் பொருட்டு, முன்னெச்சரிக்கையாக, **ஈசான சிவாசாரி யாரைத்** தரிசித்து அவர் திருவடிகளில் வணங்கித் தன் னைச் சீடனாக ஏற்றுக்கொள்ளுமாறு அவரை வேண் டினான். அதற்கு ஆசாரிய மூர்த்திகளும் இசைய, அரசன் அவரை இராஜ குருவாக ஏற்றுக்கொண்டு, அவருக்கும் அவர்தம் தொண்டர்களுக்குமென மிக அழகியதொரு மடாலயத்தை மதுரையில் நிறுவி,

அது நடைபெறுவதற்கு வேண்டிய பணியாளர்களை யும் அமைத்தான். 'அரசன் எவ்வழி, அவ்வழி, மக்கள்' என்ற முதுமொழிப்படி அரசனுடைய பக்தி நெறியை மக்களும் பின்பற்ற, பாண்டிநாடு முழுதும் ஈசான சிவாசரியாரின் சீடர்களாகி, தன் நாடு ஒட்டிய வரையில் நரக வாயிலை அடைத்து நின்றது.

அகோர சிவாசாரியார், ஈசான சிவாசாரியார் இருவரும் மதுரையில் சந்தித்தபோது பாண்டிய மன்னனும் மக்களும் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. அவர்கள் செய்த வழிபாடுகளை இரு ஆசிரியர்களும் அன்புடன் ஏற்று, அவர்களை வாழ்த்தி அனுப்பிப் பின், அவர்கள் ஏகாந்தத்தில் இருந்தபோது, அகோரர் தம் பூம்புகார் வணிகருடன் அங்கு வந்துள்ள காரணத்தைத் தெரிவித்து, தாம் சிதம்பரத்துக்கே சென்று, தவம்புரிந்து, ஸ்ரீ நடராஜனின் குஞ்சிதபாத நீழலையடையவே விரும்புவதாகவும், அவ்வாறு செய்வதற்கு ஸ்ரீ ஈசான சிவாசாரியார் தம்முடன் வந்த வணிகர்களைத் தம் சீடர்களாக அருளுடன் ஏற்றுக் கொண்டு, அவர்களின் விருப்பப்படி அவர்களை இளைசையில் குடியேற்றி ஆட்கொள்ளவேண்டு மென்றும் பிரார்த்திக்க, ஈசான சிவாசாரியாரும் 'ஓம்' என்று அங்கீகரித்தனர். அரசனும் இவற்றைக் கேட்டு மனமகிழ்ந்து, தன வைசியர்கள் தம் நாட்டில் குடியேறுவதை முழு மனத்துடன் ஏற்றுக் கொண்டான். அவனும், **இரு ஆசாரியர்களுடன்** வைசியர்களை முன்னிட்டுக்கொண்டு இளைசைப்பதி செல்ல, அப்பொழுது அவ்வூரில் விழா நடந்துகொண் டிருந்தபடியால், அது மிகுந்த ஜோதியுடன் விளங்

கிற்று. அங்குள்ள காட்சிகளையும், ஒலி முழக்கங்களை யும் கண்ட மன்னன் விம்மிதமடைந்தான்; வணிகர் கள் பொன்னுட்டினும் சிறப்பு மிகுந்த பாண்டிய நாட் டைத் தாம் அடைந்தது குறித்துத் தம் ஆசிரியர் களின் அருட்டிறனை வியந்தார்கள். அன்று, இடப வாகனக் காட்சியானதால், வீதியில் மூர்த்திகள் தத்தம் ஊர்திகளில் உலாவந்தது நேத்திரானந்தக் காட்சியாயிருந்தது.

இவற்றையெல்லாம் கண்டு களித்த புகார் வணி கர்கள் இரவெல்லாம் கண்விழித்து, விடியுமுன் சித்த தீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணித் தமக்கு இப்பேறளித்த அகோர சிவாசாரியாரவர்கள் முன்வந்து தண்டனிட்டு நின்றூர்கள். அப்பொழுது ஸ்ரீ ஆசாரியாரவர்கள் வணிகர்களை நோக்கிப் பின்வருமாறு கூறலாயினூர்.

"தேவதேவராகிய கைலாசநாத ஸ்வாமியினு டைய தரிசனத்தால் நம் பிறவி இன்றைக்கே பயன் பெற்றது. நம் தவமும் இன்றேக்கே பயன்பெற்றது. நம் ஞானமும் இன்றே கைகூடிற்று. **வைகாசி மாதத் திலே விசாக நக்ஷத்திரத்தோடு கூடிய பௌர்ணமி** யில் நடக்கும் உற்சவ முடிவிலே கைலாசநாதஸ்வாமி யின் அற்புத தரிசனம் பெற்ருேம். இத்தலத்தைவிட வும், இங்குள்ள தீர்த்தத்தை விடவும் சிறந்தவை வேறில்லை. இலௌகிக வைதிகங்களிலே வல்லவர்கள், திருவிழாக் காலத்திலே ஸ்வாமியோடு சித்த தீர்த்தத் தில் ஸ்நாநம் செய்கிறவர்கள் நூறு அசுவமேத பலன் பெறுவர்" என்று கூறுகிருர்கள்.

இவ்வாறு அவர் உபதேசம் செய்ததும், வணிகர். இரு ஆசாரியர்களையும் அழைத்துக்கொண்டு ஆலயத்

தினுட்புகுந்து, நித்யாகல்யாணி அம்மை, கைலாசநாத ஸ்வாமி என்றவர்க்கும், மற்றும் அங்கு எழுந்தருளி யுள்ள எல்லாத் தேவமூர்த்தங்களுக்கும் நவசித்தர்கள் வழிபட்ட ஒன்பது இலிங்கங்களுக்கும் ஆகமப்படி அபிஷேகம முதலிய சிறப்புக்களைச் செய்து, பிராமண போசனமும் செய்வித்தார்கள். பிறகு அவர்கள் அகோர சிவாசாரியாரின் திருவடிகளில் வணங்கி, "மூன்று காலங்களையுமறிந்து உயிர்களுக்கு நன்மை செய்யும் முதல்வரே! ஐம்புல வேடர்களையும் அடக்கிய ஆசாரியரே! இனி நாங்கள் செய்யவேண்டு வனவற்றை எங்களுக்குக் கூறியருள வேண்டுகிறோம். எங்கள் நாட்டையும் நகரையும் விட்டு இணையற்ற புண்ணியத் தலமான இங்கு எங்களைச் சேர்த்தருளி னீர்கள்; உன்னத ஆசாரியரான ஈசான சிவாசாரியார் அவர்களின் திருவடித் தொண்டிற்கும் எங்களை உரியவர்களாக்கிவிட்டீர்கள்; இவற்றிற்கெல்லாம் எளியேமாகிய நாங்கள் கருதக்கூடிய கைம்மாறும் உண்டோ? இனியும் நாங்கள் வாழவேண்டிய முறை களுக்கு ஆணையிட்டருள வேண்டுகிறோம்" என்றனர்.

அச் சொற்களைக் கேட்ட ஆசாரியர், சற்று ஆலோசித்துக் கூறுவாராயினர். அவர், "அன்பர் களே! கைலாச நாதரின் திருவடிகளை அன்போடு பூசியுங்கள். நவசித்தர்களால் பூசிக்கப் பெற்ற இலிங் கங்களையும் ஆங்காங்குள்ள தீர்த்தங்களையும் சேவியுங் கள். ஈசான சிவாசாரியரைச் சிவபிரானாகவே கருதி அவருக்கு வழிபாடு செய்யுங்கள். அவராணையைப் போற்றுதலே உங்கள் செல்வப் பெருக்குக்குக் காரண மாகும். நாம் இந்நகரினுள் புகுந்தபோது இங்கு

எல்லாம் மங்கலகரமாக இருக்கக் கண்டோம்; அது நல்லதொரு சகுனம். நாம் இனிச் சிதம்பரம் செல்ல விரும்புகிறோம். நீங்கள் இந்நகரத்திலேயே தங்கி, ஈசான சிவாசாரியாரின் ஆணைப்படி நடந்து நற் பேறடைவீர்கள்'' என்று கூறி, அனைவர்க்கும் விபூதி யளித்து, அந்நகரை விட்டுச் சிதம்பரத்தை நோக்கி நடந்தார்.

அரசன் உதவிகொண்ட வணிகர்கள் இளசை யிலேயே தங்கள் இல்லங்களை அமைத்துக்கொண்டு, நகர்ப்புறத்திலே தூய்மையான ஓரிடத்திலே தம் ஆசாரியருக்கும் ஒரு திருமடம் அமைத்துக் கொடுத் தார்கள். பாண்டிய மன்னனும் நவசித்தர்கள் பூசித்த ஆலயங்கள் அனைத்தையும் வணிகர் வசம் ஒப்பு வித்துத் தன் கோநகராகிய மதுராபுரி திரும்பினான். வணிகர்கள் தம் ஆசாரியர் திருவருளைத் தலைமீது தாங்கி, தம் இலௌகிகத் துறைகளோடு, சிவபுண் ணியத் துறைகளிலும் திளைத்து ஆடி, எல்லாச் செல் வங்களும் கைவரப்பெற்று, மிக மங்களகரமான வாழ்க்கையைச் செலுத்தி வரலாயினர்.''

இவ்விதம் வஸிஷ்டர் முதலான முனிவர்களுக்கு அகத்திய மாமுனிவர் கூறினாரென்று சூதமகாமுனிவர் சொல்லியருள, அவற்றையெல்லாம் கேட்ட நைமி சாரணிய முனிவர்கள் அப்பௌராணிக உத்தமரைப் பூசித்தார்கள்.

இப்புராணத்தைப் படிக்கின்றவர்களுக்கும் கேட் கின்றவர்கட்கும் சிவபக்தி, ஐசுவரியம், செல்வம், மகிழ்ச்சி, ஆரோக்கியம் இவை எப்பொழுதும் பெருகிக்கொண்டேயிருக்கும். இஃது உண்மை. சற்

புத்திரர்களை விரும்புகிறவர்கள் சற்புத்திரர்களைப் பெறுவார்கள். பொருளை விரும்புகிறவர்கள் பொருட் பேறு அடைவார்கள்; புகழை விரும்புகிறவர்கள்பால் அப் புகழ் தானே வந்து சேரும். இளைப்பு நீக்கம் விரும்புகிறவர் எங்கிருந்தாலும் இந்தத் தலத்தை நினைத்த மாத்திரத்திலே தம் இளைப்புத் தீர்ந்து உள்ளக் கிளர்ச்சி பெற்று வாழ்வார்கள்.

*அந்தண ராக்கள் வாழ்க!*
*அடைவின் வான்மாரி பெய்க!*
*நந்தலில் வளங்கள் மல்க!*
*நாட்டு நல்லரசன் செங்கோல்*
*உந்துக! உயிர்க ளெல்லாம்*
*ஓங்குக! அறங்கள் யாவும்*
*முந்துக! சைவ நீதி*
*முதிருக! புவனம் முற்றும்.*

*களிதருங் காட்சி மேய*
*கயிலை நாயகனார் செம்பொன்*
*அளவில்சீ ரடிகள் வாழ்க!*
*நித்ய கல்யாணி யம்மை*
*ஒளிர்திரு முகத்திற் பூத்த*
*ஒப்பிலாக் கருணை வாழ்க!*
*இளைசைமா நகரம் வாழ்க!*
*இசைநகரத்தார் வாழ்க!*

**இளையாற்றகுடி மான்மியம் என்னும்**
**இளைசைப் புராணம்**
**முற்றும்.**

திருச்சிற்றம்பலம்

॥ श्रीरस्तु ॥

चेन्नपुरीवास्तव्येन श्रीस्वामिशास्त्रिणा विरचितं ॥

## ॥ श्री नित्यकल्याणीस्तोत्रम् ॥

ओं नमो भगवत्यै श्रीचन्द्रशेखरमूर्तये ।
सच्चिदानन्दरूपिण्यै स्वात्मबोधप्रपूर्तये ॥

श्रमापनोदनक्षेत्रस्थितां श्रमनिवृत्तये ।
भजेऽहं नित्यकल्याणीं श्रमभ्रमनिगारिणीम् ॥

केनोपनिषदुक्त श्रीमेनाकन्यास्वरूपिणीम् ।
भजेऽहं नित्यकल्याणीमेनसां नाशिनीमुमाम् ॥

शैलादिविद्यालक्ष्यार्थां शैलेन्द्रतनुजां शिवाम् ।
भजेऽहं नित्यकल्याणीं कैलासपतिवामगाम् ॥

इन्द्रादिसुरसंपूज्यां चन्द्रविद्यास्वरूपिणीम् ।
भजेऽहं नित्यकल्याणीं चन्द्रशेखरभाविताम् ॥

जयादिस्तुतपादाब्जां जयेन्द्रगुरुरूपिणीम् ।
भजेऽहं नित्यकल्याणीं जयदां भवसंगरे ॥

महादेवेन्द्रहृत्पद्ममहदानन्ददायिनीम् ।
भजेऽहं नित्यकल्याणीमिन्द्र विद्यार्थरूपिणीम् ॥

मनुकामादिविद्यार्थ लक्ष्यां मनुवरार्चिताम् ।
भजेऽहं नित्यकल्याणीं दनुजोत्थभयापहाम् ॥

कलाचोउशसंपूर्णकलाधृञ्ञमण्डलस्थिताम् ।
भजेऽहं नित्यकल्याणीममलाम्बुजमध्यगाम् ॥

नागरश्रेष्ठिवर्येढ्यां नागराजसुभूषणाम् ।
भजेऽहं नित्यकल्याणीं नगणजवरात्मजाम् ॥

कमलाभारतीसेव्यां विमलानन्ददायिनीम् ।
भजेऽहं नित्यकल्याणीममलान्तरपद्मगाम् ॥

कालोरगेन्द्रसंदष्टसुपर्णां कालचक्रगाम् ।
भजेऽहं नित्यकल्याणीं कालार्यर्धशरीरिणीम् ॥

सच्चित्तहृत्सरोजात सच्चिदानन्दभास्कराम् ।
भजेऽहं नित्यकल्याणीं विच्चेत्यर्णार्थरूपिणीम् ॥

श्रमापनोदनक्षेत्रस्थितेन्दुधरभाविताम् ।
भजेऽहं नित्यकल्याणीं भवश्रमनिवारिणीम् ॥

विद्वद्बृन्दवराराध्यां विद्वद्बृन्देष्टदायिनीम् ।
भजेऽहं नित्यकल्याणीं विद्वद्भृन्दावृतां सदा ॥

नीलोत्पललसद्धस्तां लम्बवामकरां पराम् ।
भजेऽहं नित्यकल्याणीमविलम्बफलप्रदाम् ॥

अनन्तहृदयाब्जस्थाममन्दानन्ददायिनीम् ।
भजेऽहं नित्यकल्याणीं चिदानन्दरसप्रदाम् ॥